ம்பத்துடன் களிக்க...

# கல்கி

KALKI
3.7.2005 ரூ.6.00
96 பக்கங்கள்



## "என் ராஜகுமாரன்!"

– மனம் திறக்கிறார்
சிநேகா



ருக்கானுக்கு
ன தெரியும்!"

"சூப்பர் ஸ்டார் ரேஸில்
நான் இல்லை!"



அதிரடி



'தமிழக காங்கிரஸ் உருப்பட பத்து யோசனைகள் சொல்லுங்கள்' என்றோம். மடை திறந்த வெள்ளம் போல் கொட்ட ஆரம்பித்து விட்டார் ஈ.வி.கே.எஸ். இளங் கோவன்.

1. முதலில் அன்னை சோனியா அவர்களை அழைத்து வந்து, தமிழகத் தில் மூன்று முக்கிய இடங்களில் பொதுக்கூட்டம் போட வேண்டும்.

2. காங்கிரஸ் மீது உண்மையான பற்றுள்ள ஒருவர் தமிழக காங்கிரஸ் தலைவராக வர வேண்டும்.

3. மாவட்டங்கள் தோறும்

# "காங்கிரஸ் உருப்பட 10 யோசனைகள்!"

மாநாடுகள் நடத்தப்பட வேண்டும்.

4. மக்கள் பிரச்னைகளுக்காக தினம் ஓர் அறிக்கை மட்டும் விடாமல், வீதி களில் இறங்கிப் போராட வேண்டும்.

5. தேர்தல் காலங்களில் மட்டுமே கூட்டணி பற்றிய சிந்தனையோட்டம் இருக்க வேண்டும். மற்ற சமயங்களில் காங்கிரஸ் தன்னிச்சையாகச் செயல்பட வேண்டும்.

6. காங்கிரஸின் சாதனைகள் மற்றும் பல்வேறு பிரச்னைகளில் சரியான நிலைப்பாட்டை எடுத்துச் சொல்லும் வகையில், அடிக்கடி ஊழியர் கூட்டங்கள் மற்றும் பொதுக்கூட்டங்கள் நடத்தப்பட வேண்டும். கோஷ்டி சார்பில்லாமல் எல் லாத் தரப்பு பேச்சாளர்களையும் பேச அழைக்க வேண்டும்.

7. கோஷ்டிகள் இல்லாமல் இயங் கினால் சந்தோஷமே. கோஷ்டிகள் இருக் கும் பட்சத்தில், அவற்றின் செயல்பாடுகள் ஆரோக்கியமானதாகவும், ஆக்கபூர்வ மாகவும் இருக்க வேண்டும். உதாரணமாக இரு கோஷ்டிகள் நூற்றாண்டு விழாவை நடத்தினால் நடத்தட்டும். ஆனால் இறுதி லட்சியம், தமிழகத்தில் காங்கிரஸை பலப்படுத்துவது என்ற ஒன்றாகவே இருக்க வேண்டும்.

8. தமிழக காங்கிரஸ் தலைவர்கள் தங்கள் கருத்து வேறுபாடுகளை நேரடி யாகத் தீர்த்துக்கொள்ள வேண்டும். மேடைகளில் ஒருவரை ஒருவர் தாக்கிப் பேசக் கூடாது.

9. கட்சித் தேர்தலில் வெற்றி பெற வேண்டும் என்பதற்காக 'போலி' உறுப் பினர்களைச் சேர்க்கக் கூடாது.

10. அடிமட்டத்திலிருந்து மாநில கட்சித் தலைவர் வரை உள்ள பொறுப்பு களுக்கு உட்கட்சித் தேர்தல் நடத்தி, ஜனநாயகப் போக்கை வளர்க்க வேண்டும்.

கொசுறு: ஒவ்வொரு காங் கிரஸ்காரனுடைய எண்ணமும் காமராஜர் ஆட்சியை தமிழகத் தில் கொண்டு வருவதை நோக் கியே இருக்க வேண்டுமே தவிர, சுயலாபத்துக்காகவும், மற்ற தரப்பு ஆட்களை கவிழ்க்கும் வகையிலும் இருக்கக் கூடாது.

- ப்ரியன்

இளங்கோவன்

# வட்டமேஜை

சத்குரு ஜக்கி வாசுதேவை, 'காவி கட்டிய பெரியார்' என திருமாவளவன் வர்ணித்திருந்தது ரசிக்கும்படியாக இருந்தது.
தூத்துக்குடி, முத்துக்குமார்.

"எனக்கும் திருமுருகனுக்கும் இடையிலான உறவு நன்றாகவே இருக்கிறது" என்று திருச்செல்வம் சொல்லியிருப்பது, சோற்றிலே முழுப் பூசணிக்காய்!
மதுரை, என். பாலகிருஷ்ணன்.

'புக் பேங்க்' பகுதியில் ஏற்படுத்திய புதுமை அருமையாக உள்ளது. என்றும் புதுமையும் பொலிவும் நிறைந்த கல்கி, வாழ்க வளமுடன்!
திருப்பூர், செந்தில்குமார்.

சரோஜாதேவி, டைரக்டர் ஸ்ரீதரைச் சந்தித்து ஒருவருக்கொருவர் பகிர்ந்துகொண்ட மலரும் நினைவுகள் என்றும் மறக்கமுடியாதது.
கோ. புதூர், இரா. சக்கரபாணி.

அட! என ஆரம்பித்து, ஆஹா என தொடரும் உள்ளம் துறந்தவனுக்கு, எங்கள் உள்ளத்தையே வாரம் முழுவதும் திறந்து வைத்துள்ளோம்!
சென்னை, எம். ஜோதிகுமார்.

சும்மா கிடந்த சங்கை ஊதிக் கெடுத்த ஆண்டி போல் ஆகிவிட்டார் அத்வானி. இதைப் பெரிது படுத்திய அரசியல் நடவடிக்கைகள், வெறும் வாயை மென்று கொண்டிருந்த அண்டை நாடுகளுக்கு அவல் கொடுத்தது போல் அமைந்து விட்டன. கல்கியின் தலையங்கம் சரியான கருத்துக் கணிப்பு.
கிழவனேரி, சத்தியசீலன்.



ஒரு கவிஞர் இன்னொரு கவிஞரைப் பார்த்து பொறாமைப் படும் இக்காலத்தில், இரண்டு ஆண் கவிஞர்களோடு ஒரு பெண் கவிஞரைச் சேர்த்து வைத்து அவர் தம் கருத்துக்களையும் பிரசுரித்த உங்கள் திறமைக்கோர் சபாஷ்!
திருச்சி, இரா.சு. பிரகாசம்.

## சூப்பர் கில்லி!

'அணு உலைக்கே சவால்விடும் அணை!' பற்றி A to Z விளக்கி 'அபாயச்சங்கு' ஊதிவிட்டீர்... விழ வேண்டியவர்களின் காதில் விழுந்தால் சரிதான்!
திருவாரூர், ஆர்.இராமசுப்ரமணியன்.



தமிழினம் மீது அளவிட முடியாத பற்று கொண்ட தங்கர்பச்சான்,

தான் கோழை இல்லை என்
பதை நிரூபிப்பார் என்று
நம்புகிறேன்.
கோவில்பட்டி,
ஜெகநாதன்.



'படிக்கும்போதே, வேலை' கட்டுரை அனைத்து மாணவர்களும் படிக்க வேண்டிய அற்புதத் தகவல் பெட்டகம்.
கும்பகோணம், ரத்னபாரதி.

செல்போன் எச்சரிக்கை அதிர்ச்சியாகவும், அதேசமயம் அறிவுரையாகவும் அமைந்தது.
திருநெல்வேலி, நெல்லை எஸ்ஸார்.

விவேக்கின் காதல் சிறகுகளைப் படித்தபோது மனம் சிறகடித்துப் பறந்தது.
சங்கராபுரம், ஜி. குப்புசாமி.

ஆதவன் ஹாட்மெயிலில் நான்கு பிரமுகர்கள் என்று சொல்லிவிட்டு மூன்று பேரை மட்டும் போட்டுவிட்டீரே... உமக்கும் வெய்யில் கொடுமையா...
சென்னை, ஜே. துரைராஜ்.

அட்டைப் படம் :
ஆண்டனி ஸ்ரீதர்



**வாரம் ஒரு வாசகர்!**

கருவறை சிசு மம்மியுடன் அடிச்ச கற்பனை ஹூட்டி, சூப்பர் கில்லி!
திருநெல்வேலி,
எஸ். சுந்தர்.




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர் :
கி. ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
22251522, 22250623,
22251324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யுஎஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications**
**Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

## சந்திப்பு

**ஒரு வழியாய் அந்நியனை முடித்துவிட்டு ரிலாக்ஸாகியிருக்கிறார் விக்ரம். அடுத்து தான் நடிக்கும் 'மஜா' படத்தின் படப்பிடிப்புக்காக உடுமலைப்பேட்டை கிளம்பவிருந்தவர், கல்கிக்கென அளித்த பிரத்யேகப் பேட்டியிலிருந்து...**

**ஒரு சீரியஸ் படத்தில் நடித்த கையோடு, ஒரு காமெடிப் படத்தில் நடிப்பது கமலின் வாடிக்கை. அவரது வழியைப் பின்பற்றுகிறீர்கள் போலிருக்கிறது?**

"அந்நியனுக்குப் பிறகு மஜாவில் நடிப்பதைத்தானே சொல்கிறீர்கள்? நீங்கள் வேண்டுமானால் பாருங்கள், மஜாவுக்குப் பிறகு ஒரு சீரியஸ் படம், அடுத்து ஒரு காமெடிப் படம் என்று போகமாட்டேன். அந்நியனில் ரொம்ப சீரியஸ் ஆகப் பண்ணிவிட்டேன் என்பது உண்மைதான். அதிலிருந்து ரிலாக்ஸ்டாக, மஜா மாதிரி ஒரு டௌன் டு எர்த் கதையில் நடிப்பதை மனம் விரும்புகிறது. ஆனால் மஜாவில் நான் ஒரு காமெடியன் அல்ல."

**உங்களைப் போன்ற ஹீரோக்கள் வருடத்திற்கு மூன்று படங்களாவது நடித்தால்தானே இங்குள்ள ரசிகர்களுக்குத் தூக்கம் வரும்? உங்கள் ரசிகர்கள் எப்படி?**

"'தூள்' படத்துக்கு எட்டு மாதம் எடுத்துக் கொண்டேன். பிதாமகன் ஒரு வருடம் ஆனது. அந்நியன் கிட்டத்தட்ட ஒன்றரை வருடம். என்னுடைய பெரிய ப்ளஸ் எனது ரசிகர்களின் பொறுமை. ஆனாலும் அந்நியனால் பொறுமையிழந்து போய் பல ரசிகர்கள் நேரிலேயே வந்துவிட்டார்கள். 'அண்ணா, எல்லாரும் கிண்டல் பண்றாங்கண்ணா!' என்று அழுதேவிட்டார்கள். இன்னும் பல ரசிகர்கள் 'நீங்க எவ்வளவு கேப் வேணா எடுத்துக்கோங்கண்ணா! நீங்க எப்போ வந்தாலும் கலக்குவீங்கன்னு நம்பிக்கையிருக்கு'ன்னு சொன்னாங்க. இப்போது மூன்று படம் பார்த்த திருப்தியை அந்நியன் ஒரு படமே கொடுத்துடுச்சின்றாங்க. எனக்கு முதல் முறையா தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் நான்கு மொழியிலும் ஹிட். ரொம்ப சந்தோஷத்துல இருக்கேன்."

**செலவு செய்த தொகைக்கு மேல் அந்நியன் லாபம் சம்பாதித்துக் கொடுக்குமா?**

"ஹைதராபாத்தில் ஒரு தனியார் டீ.வியின் லைவ் நிகழ்ச்சிக்குப் போய் விட்டு வந்துதான் உங்களோடு பேசிக் கொண்டிருக்கிறேன். தமிழகத்தைப் போலவே அங்கேயும் அந்நியன் ஃபீவர். ரசிகர்கள்

# "சொஸைட்டிக்கு சொரணை வேணும்!"



அதற்குள் 'இரண்டுமுறை பார்த்துவிட்டோம். இன்னும் இரண்டு முறை பார்ப்போம்' என்கிறார்கள். ரஜினி சாரின் சந்திரமுகி படத்துக்கு, ஆந்திராவுக்கு மட்டும் நூற்று இருபத்தாறு பிரிண்ட்டுகள் போட்டு அனுப்பியதுதான் இதற்கு முன் அதிகம். இப்போது அந்நியன். ஆந்திராவுக்கு மட்டும் நூற்று எழுபது பிரிண்ட்டுகள். கேரளாவில் இப்போது மழைக்காலம். அங்கே தியேட்டர் வாசலில் குடைகளோடு நீண்ட க்யூ வரிசை என்று எனது கேரள நண்பர்கள் சொல்கிறார்கள். படம் சரியில்லை. முதல் பாதி போரடிக்கிறது என்று சொல்பவர்களைப் பற்றி





எனக்குக் கவலையில்லை."

**அந்நியன் கதை கேட்டபோது இந்தியன் படத்தின் சாயல் இருப்பதாக உணர்ந்தீர்களா?**

"கிடையவே கிடையாது. ஜென்டில்மேன், இந்தியன் இரண்டோடும் அந்நியனை ஒப்பிடவே கூடாது. இந்தியாவைப் பற்றி படமெடுக்கும்போது ஊழலை விட்டுவிட்டு எப்படி எடுக்க முடியும்? இன்றைய தேதிக்கு இந்தியர்களிடம் போதுமான காமென்சென்ஸ் இல்லை. தேவையான ஒழுக்கம் இல்லை. ஒவ்வொரு தனி மனிதனும் திருந்தினாத்தானே ஒட்டுமொத்த நாடும் வளரும்? இதைத்தானே ஷங்கர் தீமா எடுத்துக்கிட்டிருக்கார். ஒரே

விக்ரம்

ஒரு விஷயம், அந்நியனோட காதலி, வரி ஏய்ப்பு பண்றாங்கறது மட்டும்தான். இந்தியன்ல மகன் ஊழல் பேர்வழி. இதுலே காதலி ஒரே ஒரு தப்பு பண்ணப் பார்த்து திருந்திடுறா. பின்னாலே அவதானே அந்நியனுக்கு ட்ரீட்மெண்ட் தரவும் ஏற்பாடு பண்றா. இதுலே எங்கே இந்தியன் கதை குறுக்கே வருது?"

**நீங்கள் சந்திக்கும் விமர்சனங்கள் எப்படியிருக்கின்றன?**

"கமர்ஷியல் படமாக நடித்துக் கொண்டிருந்தால், 'இவ்வளவு பவர்ஃபுல் மீடியத்தை வெச்சுக்கிட்டு சமுதாயத்துக்கு ஒண்ணும் சொல்ல மாட்டேங்கறீங்களே' என்கிறார்கள். சமுதாயத்துக்கென்று



## "முதல் பாராட்டு பாலாவிடமிருந்துதான்!"

ஒரு படம் செய்யும்போது, அதில் நிறைய குறை கண்டுபிடித்துச் சொல்கிறார்கள். இந்த மனநிலை மாற வேண்டும்."

**யாரிடமிருந்து முதல் பாராட்டு?**

"வேறு யார், பாலாதான். 'உன்னை எந்த இயக்குனரும் இந்த அளவுக்குப் பயன்படுத்தவில்லை. ஒரு ஹீரோவை எத்தனை உச்ச ஹீரோயிசமாகக் காட்ட முடியுமோ, அத்தனை உச்சமாகக் காட்டியிருக்கிறார். அந்நியன் பார்த்த பிறகு இன்னும் கூட உன்னை நல்லா பயன்படுத்தியிருக்கலாமோன்னு தோணுது'ன்னு சொன்னார். இது எவ்வளவு பெரிய பாராட்டு!"

**இந்த இடத்தில் ஷங்கரைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்?**

"இது அச்சு அசலாக ஷங்கருடைய படம். அத்தனை பெருமையும், பாராட்டுக்களும் அவரைத்தான் போய்ச் சேரணும். அம்பிங்கிற ஒரு நேர்மையான சாமானியனை, இதைவிட இரத்தமும் சதையுமா காட்ட முடியுமான்னு தெரியலை. ரெமோவை எடுத்துக்கோங்க... எவ்வளவு ஹைபை. அந்த கேரக்டருக்கு எத்தனை விதமான ஹேர் ஸ்டைல். சதாவைவிட எனக்கு அதிக ஹேர் ஸ்டைல். இந்திய அளவில் யாருமே இவ்வளவு ஹேர் ஸ்டைல் டிரை பண்ணலைன்னு எழுதிக் கொடுக்கிறேன். தூம் ஹிந்திப் படத்தில் ஜானி ஆபிரஹாமுக்கு நல்ல ஹேர்ஸ்டைல்தான். ஆனால் ரொம்பக் குறைவான எண்ணிக்கை. ஷங்கர் ஷங்கர்தான்."

**அம்பி, ரெமோ, அந்நியன் மூன்று பாத்திரங்களுக்கும், எப்படி குரல் வேறுபாடு கொண்டு வந்தீர்கள்?**

"ஒரே விஷயம், அடிப்படையில் நானொரு டப்பிங் ஆர்ட்டிஸ்ட். எனது போராட்டமான காலங்களில் எனக்குச் சோறு போட்ட கலை. இப்போது நான் எந்த ஹீரோவுக்கும் டப்பிங் பேச முடியாது. பேசினால் விக்ரம் என்று ரசிகர்களுக்குத் தெரிந்துவிடும். என்னைப் பொறுத்தவரைக்கும் நாம நடிக்கிறது நாற்பது பர்சென்ட்தான். ஒரு கேரக்டருக்கு உயிர் கொடுக்கிறது, அறுபது பர்சென்ட் டப்பிங்தான். அம்பிக்குத்தான் முதலில் டப்பிங் பேசினேன். அடுத்து ரெமோ. பள்ளி, கல்லூரியில் பேசிய அதே பிரிட்டன் உச்சரிப்பில் ஆங்கிலம் பேச வேண்டும் என்று நீண்ட நாளாக ஆசை. அந்த

ஸ்டைலை ரெமோ கேரக்டருக்குப் பயன்படுத்தினேன். அந்நியனுடைய கரகரப்பான குரலுக்கு, கண்டதையும் சாப்பிட்டு தொண்டையை இன்ஃபெக்‌ஷன் ஆக்கிக் கொண்டு பேசினேன். அந்நியனுக்குப் பேசும்போதுதான் ஒரு மாதம் தொண்டை வலி."

**ஐம்பத்தேழு வருடங்களாக இந்தியா இப்படியேதான் இருக்கிறதென்று அந்நியன் கேரக்டர் விமர்சனம் செய்கிறது? நிஜத்தில் விக்ரமின் விமர்சனம் என்ன?**



## "கோபம் வந்தா பேச மாட்டேன்!"

"நேற்று முன்தினம் நான் மட்டும் கார் ஓட்டிச் சென்றேன். சிக்னலில் மஞ்சள் விளக்கு எரிந்தது. நான் கடந்து போயிருக்கலாம். அந்நியனில் நடித்த பிறகு நானே அந்தத் தவறைச் செய்தால் நன்றாக இருக்காது. அதனால் நிறுத்திவிட்டேன். படம் பார்க்கிறவர்களுக்கும் இந்த பாதிப்பு கட்டாயம் இருக்கும். நானும், நீங்களும் பிறந்தது முதலே இந்தியா இப்படித்தான் இருக்கு. அதனால் நமக்கும் பழகிப் போச்சு. இதுவே மலேஷியா இருபது வருஷத்துக்கு முன்னாடி எப்படி இருந்தது? இப்போ எப்படி இருக்குன்னு ஷங்கர் தட்டி எழுப்பியிருக்கார். இந்த மாதிரி படங்கள் வந்தாத்தான், எல்லாம் தப்புத்தப்பா நடக்குற இந்த சொஸைட்டிக்கு, கொஞ்சமாவது சொரணை வரும்."

**உங்களிடம் எப்போதாவது ஸ்பிளிட் பர்சனாலிட்டி தலைகாட்டி இருக்கிறதா?**

"அப்படியெல்லாம் எதுவும் வந்ததில்லை. நான் நார்மலான ஆள். எனக்கு யார் மீதாவது கோபம் வந்தால் பேசுவதை அடியோடு நிறுத்திவிடுவேன். இது மட்டும்தான் என்னிடம் உள்ள வித்தியாசமான குணம். உதாரணத்துக்கு ஒரு விஷயம். என் குடும்பத்துக்கு ரொம்ப க்ளோஸ் ஃபேமிலி ஃப்ரெண்ட். அவங்க ஒரு டீச்சர். ஆறு வருஷம், தினசரி அவங்க வீட்டுக்குப் போயிருக்கிறேன். அவ்வளவு நெருக்கம். நான் நடிச்ச 'என் காதல் கண்மணி' என் முதல் படம் வெளியானது. தியேட்டருக்குப் போய் அவங்க படம் பார்த்துட்டு வந்து... 'நீயெல்லாம் எதுக்கு நடிக்க வந்தே? வேற ஏதாவது ட்ரை பண்ணலாமே. நீ நடிக்கும்போது உன் மூஞ்சி ஒரு மாதிரியாகப் போகுது. உனக்கு நடிப்பு வரல'ன்னு சொன்னாங்க. நடிப்புதான் வாழ்க்கைன்னு நினைச்ச என்னைப் பார்த்து அப்படிச் சொன்னதை என்னால தாங்கிக்க முடியல. அதுக்கு அப்புறம் இதுவரைக்கும் பதினேழு வருஷம், அவங்க கூட நான் பேசலை."

**சூப்பர் ஸ்டார் ரேஸ் பற்றி அடிக்கடி பேசுகிறீர்களே?**

"அந்த ரேஸுக்கு வெளியே இருந்து பார்க்கிற பார்வையாளன் நான். அது ரொம்ப ஜாலியா இருக்கு. நான் பார்வையாளன் மட்டும்தான். பங்கேற்பாளன் இல்லை. சூப்பர் ஸ்டார் பட்டம் கிடைச்சாக்கூட கொஞ்ச காலம் இருக்கும். அப்புறம் அது வேற ஒருத்தருக்கு... அது வேண்டாம். இன்னும் இருநூறு வருஷம் கழிச்சு கேட்டா கூட, விக்ரம்னு ஒரு நல்ல நடிகன் இருந்தான்னு மக்கள் சொல்லணும்."

பேட்டி : **ஆர்.சி.ஜெயந்தன்**
படங்கள் : **ஸ்ரீஹரி**

சர்ச்சை

# "அரசியல் தலையீட்டை அனுமதிக்க மாட்டேன்!"

நரேஷ் குப்தா



தமிழகத்தில் இன்றைக்கு அதிக டென்ஷனோடு இருப்பவரென்று நரேஷ் குப்தாவை தயங்காது சொல்லலாம். தமிழக தேர்தல் கமிஷனராக இரண்டாவது முறையாக அவர் பொறுப்பேற்றதிலிருந்தே ஏகப்பட்ட பிரச்னைகள்... குளறுபடிகள்... மிகுந்த சிரமத்துக்கிடையிலும் நேரம் ஒதுக்கி நம்மிடம் பேசினார்...

**வாக்காளர் பட்டியல் இருத்தும் பணியில் அப்படி என்னதான் குழப்பம் நேர்ந்தது?**

"சுனாமியால் பாதிக்கப்பட்ட நான்கு மாவட்டங்களைத் தவிர, மற்ற மாவட்டங்களில் உள்ள 165 சட்டமன்றத் தொகுதிகளில் பதினாறரை லட்சம் பேர் புதிதாகச் சேருவதற்கு விண்ணப்பம் கொடுத்ததாகத் தெரிய வந்தது. இதில் கடைசி நாளன்று மட்டும் பன்னிரண்டரை லட்சம் விண்ணப்பங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. புதிதாகச் சேர்க்க விண்ணப்பம் கொடுத்தவர்களின் எண்ணிக்கை, அந்த மாவட்டத்தில் உள்ள மொத்த வாக்காளர்களில்



• வாக்காளர்கள்

நான்கு சதவிகிதத்துக்கு மேல் போகக்கூடாது. ஆனால் 109 தொகுதிகளில் நான்குக்கு மேலே, கிட்டத்தட்ட பத்து சதவிகிதம் புதிய வாக்காளர்களின் விண்ணப்பங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அங்குதான் எங்களுக்குச் சந்தேகம் வந்தது. முறைப்படி இல்லாத விண்ணப்பங்களை அடையாளம் காணும் பணி தற்போது நடந்துகொண்டிருக்கிறது. இப்போது சுனாமி பாதித்த நான்கு மாவட்டங்களிலும், புதிய வாக்காளர் விண்ணப்பம் பற்றிய விவரங்கள் வந்துவிட்டன. அந்த மாவட்

டங்களில் 11 தொகுதிகளில் நான்கு சதவிகிதத்துக்கு மேல் புதிய வாக்காளர்கள் சேர்க்கைக்கு மனு கொடுத்திருக்கிறார்கள். ஏற்கெனவே நடந்து கொண்டிருக்கும் ஆய்வை, சுனாமி பாதித்த மாவட்டங்களுக்கும் விஸ்தரிக்க வேண்டியிருக்கிறது."

**கடைசி நாளன்று லட்ச, லட்சமாக விண்ணப்பங்கள் வரக் காரணம் என்ன?**

"அரசியல் கட்சிகளின் மாவட்டத் தலைவர்கள், பஞ்சாயத்து அல்லது கிராம சபாவின் தலைவர்கள், நலச் சங்கங்கள் ஆகியவற்றுக்குப் புதிய வாக்காளர் சேர்க்கைக்கு மொத்தமாக பட்டியல் கொடுக்க அனுமதி உண்டு. அவர்கள் கொடுத்த பட்டியலில் ஏதேனும் தவறு இருந்தால், மக்கள் பிரதிநிதித்துவ சட்டம் 31வது பிரிவின் கீழ் நடவடிக்கை எடுப்போம்."

**விண்ணப்பங்களை வாங்கும்போது சரியாக இருக்கிறதா என்று கவனித்து வாங்காத அதிகாரிகள் மீது என்ன நடவடிக்கை எடுப்பீர்கள்**

"மொத்தமாகக் கொடுக்கப்படும்போது தனித்தனியாகச் சரி பார்த்து வாங்க முடியாது. ஆனால் அதன் பின் பரிசீலித்து சரியாக இல்லாத விண்ணப்பங்களை நிராகரிக்கலாம். அப்படி நிராகரித்த பின்னர், இறுதிப் பட்டியல் வந்தபிறகு ஏதேனும் குளறுபடி ஆதாரபூர்வமாக நிரூபிக்கப்படுமானால், சம்பந்தப்பட்ட அதிகாரி மீது நிச்சயம் நடவடிக்கை உண்டு."

**மாவட்டங்களில் உள்ள மாநில அரசு ஊழியர்கள், ஆளும் கட்சிக்கு அனுசரணையாகச் செயல்படுவதைத் தடுக்க முடியாது போலிருக்கிறதே!**

"ஒட்டுமொத்தமாக இப்படிச் சொல்லக் கூடாது. கீழ்த்தட்டில் உள்ள சில ஊழியர்கள் அரசியல் அழுத்தத்தில் கொஞ்சம் தடுமாறலாம். இப்போதுகூட தலைமைச் செயலாளருக்கு நான் எழுதியுள்ள ஒரு கடிதத்தில் 'எந்த அரசியல் கட்சியின் நிர்ப்பந்தத்துக்கும் அடிபணியாமல் நடுநிலைமையுடன் பணியாற்றுமாறு ஊழியர்களை அறிவுறுத்தும்படி' கேட்டுக் கொண்டுள்ளேன்."

**காஞ்சிபுரம், கும்மிடிப்பூண்டி இடைத்தேர்தல்களில் தேர்தல் கமிஷனின் வழிகாட்டுதல்களை எதிர்க்கட்சிகளின் மேல் மட்டும் கடுமையாக அமல்படுத்திவிட்டு, ஆளும் கட்சிக்காரர்களுக்கு எல்லாவிதத்திலும் உதவியாக போலீஸும் ஊழியர்களும் செயல்பட்டதாக குற்றம் சாட்டப்பட்டதே!**

"போலீஸின் மேல் உள்ள குற்றச்சாட்டைப் பற்றி எனக்கு எதுவும் தெரியாது. ஆனால் ஊழியர்கள் - குறிப்பாக - வருவாய்த்துறை ஊழியர்கள் பாரபட்சமின்றிச் செயல்பட்டனர். என்னைப் பொறுத்தவரை, எந்தவித அரசியல் அழுத்தத்துக்கும் ஆளாகாமல் செயல்படுவேன், அரசியல் தலையீட்டை அனுமதிக்க மாட்டேன்."

**மாநிலத்தில் உள்ள எல்லா வாக்காளர்களுக்கும் அடையாள அட்டை கொடுப்பது எப்போது?**

"இப்போது மற்றொரு கருத்தோட்டம் உருவாகியிருக்கிறது. அதன்படி வாக்காளர் பட்டியலையே புகைப்படம் ஒட்டித் தயாரிப்பது குறித்து யோசித்து வருகிறோம்."

**மத்தியில் ஆளும் கூட்டணிக் கட்சி, முக்கிய எதிர்க்கட்சியாகவும் இங்கே உள்ளதால்தான் இப்படி சலசலப்புகளும் சர்ச்சைகளும் எழுவதாக நினைக்கிறீர்களா?**

"இதைப் பற்றியெல்லாம் கருத்து சொல்ல விரும்பவில்லை. ஆனால் கடவுளின் கருணை எனக்கிருக்கிறது. சவால்களைச் சந்திக்கும் ஆற்றலை கடவுள் எனக்குக் கொடுத்திருக்கிறார்."

**- ப்ரியன்**



"சீக்கிரம்.. ஒரு பை குடு தம்பி. பஸ் வந்துட்டிருக்கு. அந்த பஸ்ஸைப் பிடிக்கணும்."
"நம்மகிட்ட பஸ்ஸைப் பிடிக்கிற அளவுக்கு பெரிய 'பை' இல்லைங்க."
- அனுராதா ராஜப்பா

# வாழத் துடிக்கிறார்கள், படிக்க உதவுங்கள்!



• பன்னீர்செல்வம்



• திவ்யபாரதி



• இலட்சுமி

**பே**ராவூரணி அரசு மகளிர் மேல் நிலைப் பள்ளியில் பதினோராம் வகுப்பு சேர்ந்திருக்கிறேன். என் தந்தை உடல்நிலை சரியில்லாதவர். தாய் விவசாயக் கூலி வேலை பார்த்து குடும்பத்தைக் காப்பாற்றுகிறார். சீருடை, நோட்டு, புத்தகம் வாங்க எனக்கு உதவித் தொகை வழங்குமாறு பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன்.

**பெருமகளூர், ப. திவ்யபாரதி**

**யா**தவர் கல்லூரியில் முழு நேர முனைவர் பட்ட ஆய்வாளராகப் பயின்று வருகிறேன். 'பரிதிமாற் கலைஞரின் நாடகவியல் திறனாய்வு' என்ற தலைப்பில் ஆய்வு செய்கிறேன். என் தகப்பனார் சிறிய கடை வைத்திருக்கிறார். கல்வி எனும் அரிய செல்வத்தைப் பெற, போதிய பொருட் செல்வம் இல்லாது கஷ்டப்படுறேன்...

**மதுரை, ப.சு. இலட்சுமி**

**ரா**ணிப்பேட்டை பொறியியல் கல்லூரியில் நான்காம் ஆண்டு படித்து வருகிறேன். ஊனமுற்ற மாணவன். தந்தை இறந்து பதினாறு வருடங்கள் ஆகின்றன. அம்மா, நெசவுத் தொழிலில் ஈடுபட்டு என்னைப் படிக்க வைக்கிறார். தற்போது நெசவுத் தொழில் நலிவுற்றுள்ளது. எனக்கு உதவித் தொகை கிடைத்தால் நன்றியுடையவனாவேன்.

**காஞ்சிபுரம், பி. பன்னீர்செல்வம்**

**கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை** இதுபோன்ற கடிதங்களை ஆண்டுதோறும் ஆயிரக்கணக்கில் பெறுகிறது. ஒவ்வொரு விண்ணப்பத்தையும் கவனமுடன் ஆராய்ந்து, சான்றிதழ்களை சரிபார்த்து அறங்காவலர்கள், உதவித் தொகை பெறத் தகுதியுடையோரைத் தேர்வு செய்கிறார்கள்.



நடப்பு ஆண்டுக்கு ரூ.2,25,000 பல்வேறு நிலைகளில் படிக்கும் ஏழை மாணவர்களுக்கு விநியோகமாகிறது. அமரர் கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவாக நடைபெறும் இந்தப் புனிதப் பணியில் பங்கேற்க விரும்புவோர், தங்களால் இயன்ற அளவுக்கு நன்கொடையை Kalki Krishnamurthy Memorial Trust என்ற பெயருக்கு MO/DD/A/c Payee Cheque மூலம் அனுப்பலாம்.

**நன்கொடைகளுக்கு வருமான வரி விதி 80Gன்படி வருமானவரி விலக்கு உண்டு.**

ரூ.1000 அல்லது அதற்கு அதிகமான அளவில் கிடைக்கப் பெறும் நன்கொடைகள், மூலதன நிதியில் சேர்க்கப்பட்டு அரசுப் பத்திரங்களில் முதலீடாகின்றன. இதிலிருந்து கிடைக்கும் வருவாய், ஆண்டுதோறும் கல்விக்கான உதவித் தொகைகளாக விநியோகமாகின்றது. ஆக, உங்கள் நன்கொடை, மாணவர் உலகுக்கு நிரந்தரப் பயன் தரும். நன்றி.

**கல்கி ராஜேந்திரன்,**
**நிர்வாக அறங்காவலர்**

நன்கொடைகள் அனுப்ப முகவரி :

Managing Trustee
Kalki Krishnamurthy Memorial Trust,
New #14, Fourth Main Road,
Kasthurba Nagar, Adyar,
Chennai - 600 020.




## அரசியல்வாதிகள் இழுக்கும் ஆதாயத் தேர்!

அசம்பாவிதம் ஏதுமின்றி கண்டதேவி சுவர்ணமூர்த்தீசுவரர் தேர்த் திருவிழா நடந்து முடிந்திருக்கிறது. அதனை அமைதியாக நடத்திக்காட்டிய சிவகங்கை மாவட்ட நிர்வாகத்துக்கும் காவல்துறைக்கும் பாராட்டுகள் உரியன.

தலித்துகள் இந்தத் திருவிழாவில் தேரிழுக்கக் கூடாது என்ற சமூக சீர்கேட்டை எதிர்த்து, நீதிமன்றத்தில் மனு செய்ய வேண்டியிருந்தது என்பது தமிழ்நாட்டுக்குப் பெருமை சேர்க்கும் விஷயமல்ல. இருபத்தோராம் நூற்றாண்டிலும் ஜாதி ஆதிக்க உணர்வு நீடிப்பது கேவலமே. எனினும் கடந்த பல ஆண்டுகளாக ஒரு சட்டம் ஒழுங்குப் பிரச்னையாக உருமாறி, அடிதடியிலும் உயிரிழப்பிலும்கூட முடிவடைந்த இந்தத் தேர்த் திருவிழா, இவ்வாண்டு அமைதியாக நடந்துள்ளது. தலித்துகளையும் அரவணைத்து, திருவிழாவை அமைதியாக நடத்தும்படி உயர்நீதிமன்றம் பிறப்பித்த ஆணையை, மாவட்ட நிர்வாகம் பொறுப்புணர்வோடு சிறப்பாக நிறைவேற்றியுமிருக்கிறது.

இரு ஜாதியினரிடையே அன்பையோ, நட்பையோ, மனிதாபிமானத்தையோ சட்டத்தால் வலியுறுத்தி வளர்த்துவிட முடியாது. சட்டம் ஆணைதான்போட முடியும். அன்பும் அங்கீகாரமும் இல்லாத சூழலில், அந்த ஆணையைச் செயல்படுத்துவது மிகவும்



கல்கி



2005 ஜூலை 3
பார்த்திப ஆனி 19
மலர் : 63
இதழ் : 49

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




கஷ்டம். பொது மக்களின் உணர்வுகள் கொந்தளிக்கக்கூடிய இதுபோன்ற சமயங்களில், வன்முறையையும் உயிர்ச்சேதத்தையும் தவிர்ப்பதற்காக காவல்துறை முன்னெச்சரிக்கை நடவடிக்கை எடுக்கிறது; வன்முறையைத் தூண்டக்கூடிய சிலரைத் தடுப்பு நடவடிக்கையாகக் கைது செய்து, தாற்காலிகமாகச் சிறை வைக்கிறது. இந்த அடிப்படையில்தான் புதிய தமிழகம் டாக்டர் கிருஷ்ணசாமியும், விடுதலைச் சிறுத்தைகள் திருமாவளவனும், கண்டதேவி தேர்த் திருவிழாவுக்குப் புறப்பட்டபோது கைது செய்யப்பட்டுள்ளனர். இந்தக் கைதை அவர்கள் கடுமையாக எதிர்த்து குரல் கொடுத்துள்ளனர். நீதிமன்றத்துக்கும் சென்றுள்ளனர்.

கிருஷ்ணசாமியும் திருமாவளவனும், தங்கள் தொண்டர்களுடன் கண்டதேவிக்குப் படையெடுத்துவர அனுமதிக்கப்பட்டிருந்தால் என்ன ஆகியிருக்கும்..? தொண்டர்களின் உற்சாகம் கட்டுமீறியிருக்கக்கூடும். நீதிமன்ற ஆணையைக் கூட, தலைவர்களின் தனிப்பட்ட சாதனையாக்கி முழங்கியிருப்பார்கள். அத்தலைவர்கள், தங்களுக்கேயுரிய உணர்ச்சிகளைத் தூண்டும் பாணியில் பேசி, மக்களை உசுப்பிவிடும் சூழல் உருவாகி யிருக்கும். இதைக் கண்டு தலித் அல்லாதார் அச்சமுற்றோ, ஆவேசமுற்றோ வன்முறை யைக் கிளப்ப வழி பிறந்திருக்கும். இத்தலைவர்கள் அதிகம் பேசாமலேயிருந் திருந்தால்கூட, அவர்களுடைய வருகையே கோப-தாபங்களைத் தூண்டியிருக்கும்.

இதெல்லாம் எதுவுமின்றி, கோயில் நிர்வாகமே 'அனைத்து ஹிந்துக்களும் தேர் இழுக்கலாம்' என்று அறிவித்து, கணிசமான தலித்துகளின் பங்கேற்புடன் ஊர் கூடித் தேர் இழுத்திருக்கிறது.

ஆனால் திருமாவளவனுக்கும் கிருஷ்ணசாமிக்கும்தான் இந்த நல்ல காரியத்தால் திருப்தி இல்லை! தாங்கள் அனுமதிக்கப்படாததை அரசியலாக்கிக் கொண்டிருக் கிறார்கள். அரசியல் உள்நோக்கம் ஏதுமின்றி, சமூக நோக்கில் மட்டுமே அவர்கள் கண்டதேவிக்குச் செல்ல விரும்பியிருந்தால், தமிழக முதல்வரை நேரடியாகத் தொடர்பு




கொண்டு காவல் துறைக்கு முன்கூட்டியே 'தெரிவித்துவிட்டு, மக்களையும் சூழ்நிலையையும் தயார்ப்படுத்திவிட்டுப் போய்வந்திருக்கலாம். ஆனால் அவர்கள் அப்படிச் செய்யாமல், ஏதோ யுத்தத்துக்கு வியூகம் வகுப்பதுபோல், ரகசியத் திட்டம் தீட்டிப் புறப்படப் பார்த்திருக்கிறார்கள்.

தமிழக அரசும் மனம் வைத்திருந்தால், இவ்விரு தலைவர்களையும் கைது செய்யாமலே பிரச்னைக்கு முற்றுப்புள்ளி வைத்திருக்கலாம். முன்கூட்டியே தகவல் தெரிந்ததால்தான் இருவரும் கைது செய்யப்பட்டார்கள். தகவல் அறிந்ததுமே முதல்வர் ஜெயலலிதா இரு தலைவர்களையும் அழைத்து, கண்டதேவி செல்லும் முயற்சியைக் கைவிடும்படி கூறியிருக்கலாம். அல்லது "எனது அமைச்சர் ஒருவரையும் அனுப்புகிறேன்; மூவருமாகச் சென்று திரும்புங்கள். ஆனால் தொண்டர் படையோ, உணர்ச்சி தூண்டும் பேச்சோ வேண்டாம்" என்று கேட்டுக் கொண்டிருக்கலாம். அப்போது அவர்களால் மறுத்திருக்க முடியாது. மறுத்திருந்தால், அவர்களுக்குத்தான் அவப்பெயர் ஏற்பட்டிருக்கும்.

ஆனால், முதல்வர் இப்படி கௌரவமாக நடந்து கொள்ளவில்லை. கைது செய்ய ஆணை பிறப்பித்திருக்கிறார்.

இதையெல்லாம் மீறி, தேர்த் திருவிழா வெற்றி பெற்றது மக்களின் வெற்றி - குறிப்பாக தலித் மக்களின் நீண்ட நாள் உரிமைப் போரின் உன்னத வெற்றி. ஆண்டுக்கு ஆண்டு இதுபோல் அனைத்துத் தரப்பினரின் பங்கேற்பு அதிகரித்து பேதங்கள் ஒழிய வேண்டும்.

பேதங்களைப் பயன்படுத்திக்கொண்டு அரசியல் ஆதாயம் தேடுகிற அரசியல்வாதிகளின் சுயநலப்போக்கு அப்போதுதான் முடிவுக்கு வரும்.

ஊர் கூடித்தான் ஆன்மிகத் தேர் இழுக்க வேண்டுமே தவிர, அரசியல்வாதிகளின் ஆதாயத் தேராக அது மாறிவிடக்கூடாது. ●

'அலைகள்' மெகா சீரியலில் ரங்காவாக வந்து, தூங்கிக் கொண்டிருப்பவர்களையும் எழுப்பிவிட்டு மிரட்டிய வேணு அர்விந்த், தற்போது 'செல்வி' தொடரில் ராதிகா, சரிதா போன்றோரையே தூக்கிச் சாப்பிட்டு, ஏப்பம் விட்டுக் கொண்டிருக்கிறார். அவரைச் சந்தித்தபோது, தமது அனுபவங்களை நம்முடன் பகிர்ந்து கொண்டார்.



### ரங்கா

என் மனதைப் பாதித்த, ரொம்பவும் அனுபவித்துச் செய்த, அற்புதமான கதாபாத்திரம். என்மீது மண்ணை வாரிப் போட்டு திட்டுமளவுக்கு ரசிகர்களிடம் பெயர் வாங்கிக் கொடுத்தவன் ரங்கா. அதன்பிறகு எத்தனையோ கதாபாத்திரங்களைச் செய்து விட்டாலும்கூட, இன்றைக்கும் என்னை நேரில் பார்ப்பவர்கள் கொஞ்சம் மிரட்சியோடு ஒதுங்கித்தான் போகிறார்கள்.

### ஜி.ஜே

'செல்வி'யில் நான் ஏற்றிருக்கும் கதாபாத்திரத்தின் பெயர். பணத்திற்காக எதையும் செய்யக்கூடியவனாக ஜி.ஜே இருப்பதால், மக்கள் கொஞ்சம் அச்சத்தோடுதான் பார்க்கிறார்கள். உண்மையில் இந்த கேரக்டரின் பலம் என்ன தெரியுமா... ஜி.ஜே நல்லவனா? இல்லை கெட்டவனா என்று தினம் தினம் வரும் குழப்பம்தான். நடிப்பதற்கு ஸ்கோப் உள்ள கேரக்டர்.

### ராதிகா

நல்ல அழுத்தமான கேரக்டராக ஜி.ஜே இருந்

தாலும்கூட, அலைகள் ரங்கா அளவுக்குப் பெரிதாக மிரட்டவில்லையே என்கிறார்கள். உண்மையில் அலைகளில் ரங்காதான் எல்லாம். ஆனால் செல்வியிலோ, ராதிகா - சரிதா போன்ற லெஜண்டுகளோடு நானும் ஒருவன். அவர்களுடன் இணைந்து நடிப்பதே எனக்குப் பெரிய விஷயம். கொஞ்சம் பொறுத்திருந்து பாருங்கள்... ஜி.ஜே இன்னும் என்னவெல்லாம் செய்யப் போகிறான் என்று...

**"இன்னும் என்னவெல்லாம் செய்யப் போகிறேன் பாருங்கள்...!"**

# "நான் நல்லவனா... கெட்டவனா..?"

### இமேஜ்

சின்னத்திரை நடிகனுக்கு இமேஜே கிடையாது. ஏழு மணி சீரியலில் ஹீரோவாக நடிப்பவர், ஒன்பது மணி சீரியலில் காமெடி செய்வார். அவரே பத்தரை மணி சீரியலில் வில்லன் வேடம் செய்வார். இதுதான் இன்றைய டிரெண்ட்... இதைப் புரிந்துகொண்டு மக்கள் ரசிக்கத் துவங்கி விட்டார்கள். ஆகவே இமேஜ் என்பது நல்ல நடிகனா, கெட்ட நடிகனா என்பதில்தான் இருக்கிறதே தவிர, நல்ல வேடம், கெட்ட வேடத்தில் இல்லை.

### சினிமா

ஹீரோவாக மட்டுமே நடிப்பேன் என்று நான் அடம் பிடிக்கவில்லை. ஆனால், பெயர் வாங்கித் தரக்கூடிய கேரக்டர்களில் நடிக்க ஆசை. இந்த விஷயத்தில் எனக்கு ஆதங்கம் இருக்கிறது. சின்னத்திரை எப்படி சினிமா பிரபலங்களை அவர்களுடைய பாப்புலாரிட்டிக்காகப் பயன்படுத்திக் கொள்கிறதோ, அதைப் போல சின்னத் திரையில் பிரபலமாக இருப்பவர்களை சினிமாவில் பயன்படுத்திக் கொள்ளும்போது, இது இரண்டு தரப்பினருக்குமே நல்ல பலனைத் தரும். ஆனால், இந்த எண்ணம் சினிமாவில் இருக்கும் சிலருக்கு மட்டும்தான் இருக்கிறது.

### சாதனை

இத்தனை சீரியல்களில் நடித்துவிட்டோம், பத்து வருடத்திற்கும் மேலாக நடிக்கிறோம் என்பதில் எவ்வித சாதனையோ, பெருமையோ எனக்கு இருப்பதாகத் தெரியவில்லை. ஆனால் பாலசந்தர், பாலுமகேந்திரா போன்ற இயக்குனர்களுடன் பணியாற்றியது, கல்கியின் 'அலை ஓசை'யில் நடித்தது, 'ரங்கா' மாதிரியான மக்கள் மனதில் பதிந்த கேரக்டர்கள் செய்தது போன்றவற்றில் எனக்கு மிகப்பெரிய திருப்தி உண்டு.

### ஆசை

என்னை ஒரு நடிகனாக எப்படி சின்னத்திரை சிறப்பாகப் பயன்படுத்திக் கொண்டதோ, அதே போல எழுத்து, இயக்கம் போன்ற கோணங்களிலும் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற ஆசையும், ஆர்வமும் உண்டு. அதாவது சாம்பாரில் இருக்கும் காய்கறிகளுள் ஒன்றாக இருப்பதைவிட, சாம்பாரையே நான் செய்து, பரிமாற வேண்டும் என்பது எனது எண்ணம். பார்க்கலாம்.

- இரா.முத்துக்குமார்
படம்: ஸ்ரீஹரி

**வேணு அர்விந்த்**

காவியம்

மூன்று வருஷங்களுக்கு முன்னால் நடந்த ஒரு சம்பவம். ஓர் ஊரில் ஒரு கல்யாணம் நடந்தது. கல்யாணத்துக்கு வந்திருந்த விருந்தாளிகள் ஒரு ஜாகையில் தங்கியிருந்தார்கள். சந்தனம் பூசிக்கொண்டு வெற்றிலை பாக்கு மென்று கொண்டு குஷாலாகப் பேசிக் கொண்டு இரவு வெகு நேரம் வரையில் காலம் கழித்தார்கள். பேச்சினிடையே "உங்கள் பையனுக்குப் பரீட்சை பாஸ் ஆகிவிட்டதா?" என்று ஒருவரையொருவர் கேட்டுக் கொண்டார்கள். சிலர் "ஆகிவிட்டது!" என்றார்கள். பிறகு விளக்குகளை அணைத்துவிட்டுப் படுக்கச் சென்றார்கள். படுத்துச் சிறிது நேரத்துக்கெல்லாம் கதவு தடதடவென்று இடிக்கப்பட்டது. "யார்?", "என்ன?" என்று அரைத் தூக்கமாயிருந்தவர்கள் கேட்டார்கள். "தந்தி வந்திருக்கிறது!" "யாருக்கு?" "சிவராம சுந்தரம் பிள்ளைக்கு!" குறிப்பிட்ட நபர் தூக்கி வாரிப் போட்டுக்கொண்டு எழுந்தார். தந்தியை வாங்கிப் படித்தார். "பையன் குளத்தில் விழுந்து இறந்தான்! உடனே வரவும்!" என்று தந்தியில் எழுதியிருந்தது. "ஐயோ! ஐயோ!" என்று தகப்பனார் அலறி அடித்துக்கொண்டு ஓடினார். பிற்பாடு விசாரித்ததில் பையனுடைய தற்கொலைக்குக் காரணம் அவன் நாலாவது பாரம் பரீட்சையில் தேறாததுதான் என்று தெரிய வந்தது.

ஆயிற்று; இந்த வருஷத்துக்கு இளம் பிள்ளைகளின் தற்கொலை சீசன் ஆரம்பமாகிவிட்டது! ஒரு பையன் தற்கொலை செய்துகொண்டதாகச் செய்தி வந்துவிட்டது! இன்னும் எவ்வளவு வரப் போகிறதோ?

இத்தகைய தற்கொலை பாதகத்துக்கு யார் ஜவாப்தாரி? நம் கல்விமுறைக்குக் காரண பூதரான மெக்காலே ஜவாப்தாரி; அந்தக் கல்வி முறையை நடத்தி வைக்கும் கல்வி இலாகா அதிகாரிகள் ஜவாப்தாரி; எல்லாருக்கும் மேலாக அந்தந்தப் பரீட்சைக் கேள்விகள் தயாரிக்கிறார்களே அந்தப் புண்ணிய புருஷர்களுக்கு அதிகமான பொறுப்பு இல்லாமல் போகுமா?



# பரீட்சை

பரீட்சையில் தேறாததற்காக தற்கொலை செய்து உயிரைப் போக்கிக் கொள்ளுவது மகா மூடத்தனம் என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால், அத்தகைய மனோநிலையைப் பள்ளிக்கூடச் சூழ்நிலை உண்டாக்கி விடுகிறது. தற்கொலை செய்து கொள்ளுவது மட்டுமா? உடல் மரணத்தைக் காட்டிலும் கொடிய பரிதாபகரமான ஆத்மாவின் மரணம் எத்தனை பேருக்கு



# எனும் பாதகம்!

அமரர் கல்கி

நேரிடுகிறது! எத்தனை பிள்ளைகள் மானம் போய்விட்டதாக எண்ணி உள்ளங் குன்றிச் சொல்லொணாத நரக வேதனையடைவது, அவர்களைப் பிற்கால வாழ்வுக்கு எவ்வளவு தகுதியற்றவர்களாகச் செய்து விடுகிறது? அவர்களுடைய திறமையையும் சுயநம்பிக்கையையும் எவ்வளவு குறைத்து விடுகிறது?

ஒரு வருஷம் முழுவதும் படிப்பதில் ஓர் இளம் பையனுக்கு எவ்வளவு மூளைச் சோர்வும் உடல்நலக் கெடுதியும் ஏற்படுகிறதோ, அவ்வளவு சோர்வும் கெடுதியும் பரீட்சை வாரத்தில் மட்டும் ஏற்பட்டு விடுகிறது. எத்தனை பிள்ளைகள் இரவில் டீ போட்டுச் சாப்பிட்டுவிட்டு இரவெல்லாம் கண் விழித்துப் படிக்கிறார்கள்! 'படிக்கிறார்கள்' என்பது தவறு; மூளை வறளும்படியாக 'நோட்ஸ்'களை உருப் போட்டுத் தள்ளுகிறார்கள். இதனால் இளம் குழந்தைகளின் உடல் நலத்துக்கு எவ்வளவு கெடுதல் ஏற்படுகிறது! யாராவது நல்ல வைத்தியர்களைக் கொண்டு ஆயிரம் மாணாக்கர்களை எஸ்.எஸ்.எல்.சி பரீட்சைக்கு முன்னாலும் பின்னாலும் வைத்திய பரிசோதனை செய்து பார்க்கட்டும், பரீட்சை கெடுபிடியினாலும், பீதியினாலும் பாதிக்கு மேற்பட்ட மாணவர்களின் உடல்நலம் சீர்கேடு அடைந்திருக்குமென்று நிச்சயமாய்ச் சொல்லலாம்.

எந்தவிதமான கல்வி முறையிலும் ஏதோ ஒரு விதமான பரீட்சை அவசியமாயிருக்கலாம். ஆனால் அந்தப் பரீட்சை குழந்தைகளின் இளம் உள்ளத்தில் பீதியை உண்டாக்கக்கூடாது; அவர்களுடைய மூளையைப் பலவீனப்படுத்தக்கூடாது. அவர்களுடைய உடல்நலத்தைப் பாதிக்கக்கூடாது. பரீட்சையில் தேறாததற்காகத் தற்கொலை செய்துகொள்ளத் தூண்டும் சூழ்நிலையும் கூடாது.

நமது கல்விமுறை மோசமானது; நமது பாடத் திட்டமும் பாடப் புத்தகங்களும் படுமோசமானவை; பரீட்சை முறையோ மிக்க கொடூரமானது. நம்முடைய கல்விமுறை, பாடத் திட்டம், பரீட்சை முறை ஆகிய மூன்றும் அடியோடு மாறுதல் அடைந்தால்தான் இந்தியாவின் வருங்காலச் சந்ததிகள் பிழைத்துக் கடைத் தேறுவார்கள்.

- கல்கி கட்டுரைகள் தொகுப்பு 2லிருந்து...
மணிவாசகர் பதிப்பகம்.




பெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருக்கிறது நதி. பாதுகாப்பாக கரையேறத் துடிப்பவர்கள் நதியின் போக்கிலேயே நீந்தப் பழகிக்கொண்டிருக்கிறார்கள். அடுத்த நொடியில் என்ன நிகழும் என்பதை புதிராக ஒளித்து வைத்திருக்கும் எதிர்நீச்சலை எல்லோரும் விரும்புவதில்லை. 'காக்க காக்க' படத்தை முடித்துவிட்டு ரிசல்டுக்காகக் காத்திருந்தபோது, என்னிடம் ஓர் எதிர்நீச்சல்காரனின் தவிப்பு. சென்னையை விட்டு நெடுந்தூரம் வந்துவிட்டேன். மூணாறு மலைப்பகுதியில் படப்பிடிப்பு. நள்ளிரவு தாண்டியும் தூக்கம் வரவில்லை. செல்போன் ஒலித்தது. அப்பா பேசினார்.

"சூர்யா, இப்போதான் 'காக்க காக்க' பார்த்துட்டு வீட்டுக்கு வந்தேன். படமே க்ளைமாக்ஸிலிருந்துதான் ஆரம்பிக்குது. ஏரியிலிருக்கிற அந்த அவுட்ஹவுஸிலிருந்து துப்பாக்கி குண்டை மார்பில் வாங்கிக்கிட்டு, மரச் சுவரை உடைத்துக் கொண்டு, அவ்வளவு உயரத்திலிருந்து அப்படியே டைவ் அடிச்சு தண்ணிக்குள்ள வந்து விழுறியே! அதைப் பார்த்துட்டு ஆடிப் போயிட்டேம்பா. என்னோட சினிமா லைஃப்ல இப்படியெல்லாம் நான் பண்ணியதில்லை. மொத ரீல்லேயே பதறடிச்சிட்டியேப்பா" என்று நா தழுதழுக்கச் சொல்லிவிட்டு ஃபோனை வைத்துவிட்டார். விடியும்வரை தூக்கம் வரவில்லை. 'காக்க காக்க' படத்தின் முதல் காட்சியில் அத்தனை நன்றாக நான் செய்ததற்கு, அப்பாதான் காரணம்.

'காக்க காக்க' சராசரியான படமே அல்ல. அந்தப் படத்தின் கதையில் போலீஸ் வாழ்க்கை எத்தனை போராட்டமாகக் காட்டப்பட்டதோ, அதே அளவு போராட்டத்தை அந்த படத்தை முடிப்பதற்காகவும் சந்தித்தோம். 'மின்னலே' படத்தை எடுப்பதற்கு முன்பே கௌதம் சார் 'காக்க காக்க'

# கலங்க வைத்த



படத்துக்கான முழு ஸ்கிரிப்டையும் எழுதிவிட்டார். "நீங்கள்தான் இந்தக் கதையில் நடிக்க வேண்டும். அந்த அன்புச்செல்வன் உங்களைத் தவிர வேறு யாராகவும் இருக்க முடியாது! எத்தனை மாதம் வேண்டுமானாலும் காத்திருக்கிறேன்" என்று பிடிவாதமாகச் சொல்லி விட்டார்.

ஆனால் எடுத்த எடுப்பிலேயே பிரச்னை. "சூர்யாவை வைத்து நீங்கள் சொல்கிற

பட்ஜெட்டில் படம் பண்ண முடியாது'' என்று பல தயாரிப்பாளர்கள் கையை விரித்துவிட்டார்கள். இறுதியாக தாணு சார் தைரியமாக முன்வந்து என்கரேஜ் பண்ணினார். உயிரை துச்சமாக மதித்து சமூக விரோதிகளோடு நேருக்கு நேர் மோதிய துணிச்சல்மிக்க அதிகாரிகளில் முக்கிய மான இருவர், விஜயகுமார் ஐ.பி.எஸ்., சைலேந்திரபாபு ஐ.பி.எஸ்.



அன்புச்செல்வன் கேரக்டருக்காக இவர்களைச் சந்தித்து என்கவுன்ட்டர் அனுபவங்களைப் பகிர்ந்துகொண்ட அந்த நிமிடமே நரம்பில் முறுக்கேறி விட்டது. படப்பிடிப்பு தொடங்கிய சில நாட்களிலேயே போலீஸ் யூனிஃபார்மின் மரியாதையும், அதை அணிந்தவுடன் உடலும், உள்ளமும் உறுதியாக நிற்பதையும் ஒவ்வொரு கணமும் உணர்ந்து

# காக்க காக்க'!

சிலிர்த்துப் போனேன். ஆனால் படம் விறுவிறு வென்று வளர ஆரம்பித்த வேகத்திலேயே திடீரென்று நின்று போனது.

பணப்பிரச்னை! கடைசி ஷெட்யூலுக்குப் பணம் இல்லை. குழப்பங் களும், பிரச்னைகளும் திரண்டு எங்களை ஆக்ரமித்தபோது, ஒருகணம் கலங்கிப் போனோம். ஆனால் படத்தின் கதை எங் களைத் துவளவிடவில்லை. அதை அத்தனை விரும்பிக் காதலித்தோம். ஆசையாக என் கையால் தங்கைக்கு ஒரு வைர நெக் லெஸ் வாங்கி பரிசளித்து விட வேண் டும் என்று பொக்கிஷமாய் மூன்று இலட்ச ரூபாய் சேர்த்து வைத்

திருந்தேன். அதைத் தயங்காமல் எடுத்தேன். என்னைப் போலவே ஜோதிகாவும் கதையை நேசித்தவர். அவரது தந்தையிடம் எடுத்துச் சொல்லி, மூன்று இலட்ச ரூபாய் வாங்கிக் கொடுத்தார். இறுதியாக கௌதம், அவரது மனைவியின் மொத்த நகைகளையும் விற்றுவிட்டார்.

ஏரியில் தண்ணீருக்கு மேலே ஒரு அழகான அவுட்ஹவுஸ் செட் போட வேண்டும். அதற்கு மட்டுமே இருபது இலட்சம் செலவு பிடிக்கும் என்றார்கள். எங்களிடம் அவ்வளவு பணம் இல்லை. பத்து இலட்சத்துக்குள் முடித்துவிட முடியாதா என்று தவித்தோம். இந்த நேரத்தில்தான் இலங்கை கை கொடுத்தது. விண்ணப்பித்த வேகத்தில் அங்கே படப்பிடிப்பு நடத்த அனுமதி கிடைத்தது. நுவரேலியா ஏரியில் ஐந்தே லட்சம் ரூபாய் செலவில் அவுட்ஹவுஸ் செட் போட்டுக் கொடுத்தார்கள்.

அந்த ஏரி ஓர் அணைக்கட்டு. ஐம்பது அடி ஆழம். இங்கே ஊட்டியைப் போல அங்கே நுவரேலியா. கத்தி மாதிரி குத்துகிற 0° டிகிரி குளிர். ஏரித் தண்ணீரில் ரத்தம் உறிஞ்சும் நீர் அட்டைகள். முதலைகள் எப்போது வரும் என்று தெரியாது. "உனக்கு அடிபட்டுவிட்டால் இந்த ஷெட்யூல் அப்படியே கேன்சல் ஆயிடும். நாம் மறுபடியும் பணம் புரட்டுவது சாத்தியமான காரியமில்லை. க்ளைமாக்ஸை டூப் வைத்து எடுத்துவிடலாம். தயவு செய்து நான் சொல்வதைக் கேளுங்கள்" என்று என்னைக் கட்டிப் போட்டார், கௌதம். என்னால் மறுத்துப் பேச முடியவில்லை.

எடுத்த எடுப்பிலேயே கதையை டேக் ஆஃப் செய்துவிடும் க்ளைமாக்ஸ் ஷாட். அன்புச்செல்வனை, மாஃபியா கேங் தலைவன் தேடி வந்து சுட்டு வீழ்த்தும் காட்சி. அதிகாலை நாலரை மணிக்கு ஷூட்டிங்.

ஏரித் தண்ணீரில் இளங்காலை பனிப் புகை எழுந்து நடனமாடிக் கொண்டிருந்தது. முதலில் டூப் வைத்து எடுத்தார்கள். ஷாட்டை மானிட்டர் திரையில் பார்த்த போது, டூப் என்று அப்பட்டமாகத் தெரிந்தது. அதற்குமேல் எனக்குப் பொறுமையில்லை. எனது உறுதியைப் புரிந்து கொண்ட இயக்குனர், 'நடப்பது நடக்கட்டும்' என்று ஓ.கே சொன்னார்.

"ரெடி! டேக்! ஆக்ஷன்!" என்று குரல் வந்ததுதான் தாமதம்... அவுட்ஹவுஸின் மேல்தளத்து ஜன்னலை முதுகால் மோதி உடைத்துக்கொண்டு, 'மாயா...' என்று கத்தியபடி கிழே டைவ் அடித்து தலை குப்புறப்போனேன். பத்தடி ஆழத்தில் சன்ஷேட் தடுப்பு. நொடிக்குள் தலையை காரின் ஸ்டியரிங் போல் பயன்படுத்தி, முதுகை வளைத்து சன்ஷேட்டுக்குக் கொடுத்தேன். அதில் தொம்மென்று மோதி அங்கிருந்து தண்ணீரை நோக்கி மல்லாந்தபடி சரிந்து, பிறகு தலைகுப்புற தண்ணீருக்குள் விழுந்தேன். இரண்டு கேமராக்கள் வைத்து எடுத்ததில் வெற்றிகரமாக வந்து விட்டது ஷாட். அந்த நேரம் அப்பாவுக்கு மனசுக்குள்ளேயே நன்றி சொன்னேன்.

எட்டு வயதுச் சிறுவனாக இருந்த எனக்கும், தம்பிக்கும் நீச்சல் கற்றுக் கொடுக்க ஏற்பாடு செய்தார் அப்பா. சென்னை இராயப்பேட்டை உட்லண்ட்ஸ் ஹோட்டல் நீச்சல் குளத்தில் தினசரிப் பயிற்சி. 'ராவ்' என்பவர்தான் எங்கள் மாஸ்டர். ஆசிய விளையாட்டுப் போட்டிகளில் பங்கேற்கும் தென்னிந்திய நீச்சல் சாம்பியன்களுக்குப் பயிற்சி அளித்தவர் என்று அப்பா சொல்லியிருக்கிறார்.

முதல்நாள் தண்ணீரைக் கண்டு பயந்த என்னைத் தூக்கி, தொபீரென்று குளத்துக்குள் வீசிவிட்டார். குளம் எவ்வளவு ஆழம் என்று தெரியவில்லை. 'எப்படியாவது உன்னை உள்ளே இழுத்துக் கொல்கிறேன் பார்' என்பது போல குளம் என்னை உள்ளே

• கிராமத்தின் மடியில்...





• முதுமையின் முகவரியாய் எனது பாட்டி...







இழுத்தது. அவ்வளவுதான்! கைகளாலும், கால்களாலும் நீரை அடித்து உதைத்துத் தள்ளிக் கொண்டு இறைக்க இறைக்க கரையை நெருங்கி மேலே ஏறி விட்டேன். அகண்டு கிடந்த அந்தக் குளத்தை வென்றுவிட்ட மகிழ்ச்சி. அதன் பிறகு ஃப்ரீ ஸ்ட்ரோக், பட்டர்ஃப்ளை ஸ்ட்ரோக் என்று விதவிதமாக நீந்தக் கற்றுக் கொண்டேன். எனக்குள் எங்கோ ஒளிந்து கிடந்த தன்னம்பிக்கையின் ஊற்றுக்கண்ணைத் திறந்துவிட்டது நீச்சல். நீச்சல் தவிர குதிரையேற்றமும், யோகாவும் கற்றுக் கொடுக்க ஏற்பாடு செய்த அப்பா, எங்களுக்கு இன்னுமொரு அற்புத உலகத்தைத் திறந்து வைத்தார். விசித்திரங்களின் விளைநிலம் அது. கவுண்டன்பாளையம். அம்மாவின் சொந்த ஊர். நான் பார்த்த முதல் கிராமம்.

நான் சிறகுகள் விரித்தது இங்கேதான். வட்ட நீச்சல்குளங்களைப் போல 100 அடி ஆழ பாதாள கிணறுகள். அவற்றின் விளிம்பில் நின்றுகொண்டு தலைகீழாய் டைவ் அடித்து, உள்ளே குதிக்கும் கிராமத்துச் சிறுவர்களின் அபார துணிச்சலைப் பார்த்து, என் தயக்கங்களை, அந்தக் கிணற்றின் தண்ணீரிலேயே தலை முழுகினேன். அன்று அவர்களோடு கிணற்றில் டைவ் அடித்துப் பழகிய அந்த ஸ்டைலும் துணிச்சலும், அப்பாவால் கிடைத்த நீச்சலும்தான் 'காக்க காக்க' க்ளைமாக்ஸ் காட்சியில் எனக்குக் கை கொடுத்தன.

வழி நெடுகிலும் வாழை, திரும்புகிற பக்கமெல்லாம் தென்னை, பச்சைப் பசேல் புகையிலை என்று கண்ணுக்கெட்டிய தூரம் வரை பசுமை போர்த்திக் கொண்டிருந்த கிராமத்தில், தாத்தா பாட்டிகள் எல்லோருக்கும் 90 வயது. ஒரு பாட்டியின் அருகில் என்னை அமர வைத்தார் அப்பா! நான் அதிர்ந்தே போனேன். அவருக்கு தொண்ணூற்று ஆறு வயது!

"சரவணா, இவங்க என்னோட அத்தை! உனக்கு பாட்டி" என்று அப்பா சொன்னார். என் கைகளைப் பற்றிக் கொண்ட பாட்டியின் முகத்தில் வரி வரியாய்ச் சுருக்கம். பல தலைமுறைகளைக் கடந்து நிற்கும் ஒரு முதிர்ந்த மரத்தின் பட்டைகளைத் தொட்டு உணர்ந்தது போல பாட்டியின் முகத்திலும் உடலிலும் காலம் வரைந்த கோடுகள். பாட்டியைப் பார்த்து வியந்த படியே கேட்டேன். "ஏன் உங்களுக்கு இப்படி ஆயிடுச்சு?"

"நீ இத்தனை நாள் என்னைப் பார்க்க வராமல் இருந்திட்டல்ல, அதனாலதான் ராசா" - சொல்லிக்கொண்டே என்னை முகர்ந்து பார்த்தார். "என் தம்பி வாசனை அடிக்குதுபா, அவன்தான் வந்து பொறந்திருக்கான்" என்று, 35 வருடங்களுக்கு முன்னர் இறந்துபோன என் தாத்தாவை நினைத்துச் சொன்ன பாட்டியின் பார்வையற்ற கண்களில் சந்தோஷமும், கண்ணீரும் நிரம்பி வழிந்தன. முதுமையை இத்தனை நெருக்கமாக நான் நகரத்தில் பார்த்ததில்லை.

என் பாட்டியை மட்டுமல்ல, இன்னும் எண்ணற்ற ரகசியங்களை கிராமம் எனக்காகப் பொத்தி வைத்துக் காத்திருந்தது...

(டைரியைத் தொடருவேன்)

# பறக்கலாம்

சாஃப்ட்வேர், ஃபேஷன் டிசைனிங், கால்சென்டர் என்று நீளும் மாடர்ன் பெண்களின் கனவுப் படிப்புகளுள் முக்கியமானது ஏர் ஹோஸ்டஸ் கல்வி. இந்தியாவின் தலைசிறந்த பயிற்சி நிறுவனமான ஏர்ஹோஸ்டஸ் அகாடமி (AHA), சென்னையில் தனது கிளையை அண்மையில் துவக்கியுள்ள நிலையில், அதன் கிளை மேலாளர் ரமேஷிடம் ஏர்ஹோஸ்டஸ் படிப்பு பற்றி பேச்சுக் கொடுத்தோம்.

“ஏர் ஹோஸ்டஸ் பணிக்கு இன்று பெண்களிடம் நல்ல வரவேற்பு உள்ளது'' என்று உற்சாகமாக ஆரம்பித்தவர், அவர்கள் ஏன் இந்தத் துறையை விரும்புகிறார்கள் என்:



பதற்கான காரணங்களை அடுக்க ஆரம்பித்தார்.

''பல நாடுகளைக் கட்டணமின்றி சுற்றிப் பார்க்கக் கிடைக்கும் வாய்ப்பு, ஐந்தாறு வருடங்களில் வாழ்க்கையில் செட்டிலாகக் கூடிய அளவுக்குக் கிடைக்கும் அபரிமிதமான சம்பளம், வேலை செய்வதற்கு ஏற்ற சுமுகமான சூழ்நிலை, முக்கியப் பிரமுகர்கள் பலருடன் பழகக் கிடைக்கும் வாய்ப்பு என்று நீண்டுகொண்டே போகும் இந்தப் பட்டியல்... இத்தகைய கவர்ச்சிமிகு அம்சங்கள்தாம் இந்தத் துறையில் கடுமையான போட்டியையும் உருவாக்கிவிட்டன'' என்றவர், ''முன்பெல்லாம் கிராஜுவேஷன் முடித்த பெண்கள் ஓரளவுக்கு நல்ல அழகுடன் இருக்கும் பட்சத்தில், அவர்கள் எளிதில் ஏர் ஹோஸ்டாக ஆகிவிட முடியும். ஆனால் இன்றோ, கல்வித் தகுதியோ - உடல், முக வசீகரமோ மட்டும் போதாது. இதற்கென்று தற்போது வந்துள்ள பிரத்யேகப் படிப்புகள், பயிற்சிகள் மூலம்தான் ஒருவரால் இந்தத் துறையில் பிரவேசிக்கவோ, பிரகாசிக்கவோ முடியும்'' என்றார்.

AHA அளிக்கும் பயிற்சிகள் பற்றிக் கூறும்போது, ''ஏர்ஹோஸ்டஸ் பணிக்காக நாங்கள் இருவித டிப்ளமோ படிப்புகளை அளிக்கிறோம். ஒரு வருட டிப்ளமோ கோர்ஸ் முடித்தவர்கள் உள்நாட்டு விமானங்களிலும், இரண்டு வருட கோர்ஸ் முடித்தவர்கள் சர்வதேச விமானங்களிலும் பணியாற்ற முடியும். ப்ளஸ் டூ முடித்தவர்கள் இந்தப் பயிற்சிகளுக்குப் பொருத்தமானவர்கள். டிகிரி

> ''ஏர்ஹோஸ்டஸ் வேலைக்கு ஆரம்பச் சம்பளமே 25,000 ரூபாய்!''





● ரமேஷ்

படித்திருந்தால் அது கூடுதல் தகுதி. வயது 17 முதல் 26க்குள் இருக்க வேண்டும். இது கண்டிப்பான விதிமுறை'' என்றார்.

''இவையனைத்தையும் விட முக்கியமான தகுதி, இந்தப் பயிற்சிக்கு வரும் பெண்கள் மிக அழகானவர்களாகவும், ஆங்கில அறிவு நிரம்பியவர்களாகவும் இருக்க வேண்டுமென்பதுதான். அதற்காக மற்ற பெண்கள் வருத்தப்பட

# வாங்க!

வேண்டிய அவசியமில்லை. ஓரளவுக்கு அழகு இருந்தால் கூடப் போதும், நாங்கள் அளிக்கும் பர்சனாலிட்டி டெவலப்மெண்ட் பயிற்சிகள் மூலம் அவர்களை திறமையுள்ளவர்களாக ஜொலிக்க வைக்க முடியும்'' என்ற ரமேஷிடம், இந்தப் படிப்புகளுக்கான கட்டணம் பற்றிக் கேட்டால்,

''ஒரு வருட டிப்ளமோ கோர்ஸுக்கு எண்பத்தையாயிரம் ரூபாய் வசூலிக்கிறோம். இதுவே இரு வருட கோர்ஸ் என்றால், ஒன்றரை லட்ச ரூபாய் வரை தேவைப்படும்'' என்று அதிர்ச்சியூட்டினார். தொடர்ந்து அவரே, ''தொகை கூடுதலாக இருந்தாலும் இதன் மூலம் கிடைக்கும் பணிகளுக்கு ஆரம்பச் சம்பளமே இருபத்தைந்தாயிரம் ரூபாய்! இதுவே சர்வதேச அளவில் புகழ் பெற்ற நிறுவனங்கள் என்றால், சம்பளம் ஏகத்துக்கும் எகிறிவிடும்'' என்று இன்ப அதிர்ச்சியாக மாற்றினார்.

'இத்தனை சம்பளம் தருகிறார்களே... அப்படி என்னதான் வேலை, ஏர்ஹோஸ்டஸ்களுக்கு?' என்றால்,

''பைலட் மற்றும் டெக்னீஷியன்களுக்கு அடுத்து விமானத்தில் ஏர்ஹோஸ்டஸ்தான் மிக முக்கிய இடம் பெறுகிறார். வாடிக்கையாளர்களை, பிரயாணிகளை மிக அன்பாக, கனிவாக கவனித்துக் கொள்வது, அவர்கள் எதற்காகவும் முகம் சுளிக்காதவாறு பார்த்துக் கொள்வது, மீண்டும் பயணிகளைக் குறிப்பிட்ட அந்த விமான கம்பெனிச் சேவையையே விரும்ப வைப்பது என்று ஏர்ஹோஸ்டஸ்களின் பணிகள் பல கிளைகளாக விரிந்து கிடக்கின்றன. சமயங்களில் சில பயணிகள் ஏர்ஹோஸ்டஸ்களிடம் நாகரிகமற்று

ஏர்ஹோஸ்டஸ்



# என் மீது!

தூசி தட்டினேன்
பரணில் கிடைத்தது
சொட்டைக் குவளையும்
மத்துக் கழியும்...

பொங்கி வழியவிட்ட
அடுக்களைத் தவறுகளுக்காக
அம்மாவின் கையிலிருந்த
இவை
அன்றைய நாட்களில்
என்னைப் பதம் பார்த்தன...

இவளின் அடக்குமுறை கடந்த
திமிறல்கள்
என்னை நோக்கியா?

புறக்கணித்தவர்கள் மீதான
விமர்சனங்கள்
எழுதப்பட்டது என்னவோ
என்மீது...

- விஜயலட்சுமி

நடந்து கொள்ளும்போது, அந்தச் சூழலை பிரச்னைக்கு உள்ளாக்காமல் சுமுகமாக மாற்றுவதும் கூட ஏர்ஹோஸ்டஸின் பணிதான். இதில் பலவீனம் என்று பார்க்கும்போது, விமானத்திலேயே பறக்க வேண்டியிருப்பதால் குடும்பத்தை விட்டு விலகியே இருக்க நேரிடும். குழந்தையைப் பராமரிக்க அதிக நேரம், தொகை செலவிட வேண்டியிருக்கும்" என்று கூறும் ரமேஷ்,

"ஆனாலும் எங்களுக்கு வந்து குவியும் அப்ளிகேஷன்களைப் பார்க்கும் போது இந்தக் குறைகளையெல்லாம் பெண்கள் பெரிதுபடுத்துவதில்லை என்பது திட்டவட்டமாகத் தெரிகிறது. அவசர உலகில் தங்களுடைய இடத்தை நிர்ணயிக்க வேண்டிய நிலையில், இதற்காகவெல்லாம் கவலைப்பட முடியாது என்கிற அவர்களின் கருத்து வரவேற்கப்பட வேண்டியதுதான்" என்கிறார்.

'திருமணமான பின்னர் இப் பணியில் தொடர முடியாதாமே...' என்றதற்கு "பல நிறுவனங்களில் இதுபோன்ற சூழல் இருப்பது உண்மைதான். இதனைச் சரி செய்யவே நாங்கள் BPO பயிற்சியையும் இந்த கோர்ஸுடன் இணைத்துள்ளோம். ஆகவே திருமணத்துக்குப் பிறகு ஏர்ஹோஸ்டஸ் பணியைத் தொடர முடியாத பட்சத்தில், விமானம் தொடர்பான மற்ற கால்சென்டர், ரிசர்வேஷன் உள்ளிட்ட BPO பணிகளில் ஈடுபட முடியும்" என்று நம்பிக்கையூட்டினார்.

'பயிற்சி முடிந்த பின்னர் பணி வாய்ப்பினை ஏற்படுத்தித் தர AHA முனையுமா?'

"நிச்சயமாக... இந்த ஆண்டு இந்தியாவில் மட்டும் விமானப் பணிகளுக்காக இருபத்தோராயிரம் பணியாட்கள் தேவைப்படுகிறார்கள்... ஆகவே வேலை வாய்ப்பு கிடைப்பது சுலபம்... அதே சமயம் எங்களிடம் பயின்றவர்களுக்குப் பெரும்பாலும் நாங்களே ஜெட் ஏர்வேஸ், ஏர் சஹாரா, இண்டியன் ஏர்லைன்ஸ், ஏர் டெக்கான், மலேஷியன் ஏர்லைன்ஸ் உள்ளிட்ட பல பெரிய நிறுவனங்களில் வேலை வாங்கித் தந்துள்ளோம், தருகிறோம். அதனால் பறக்கும் வேலை செய்ய ஆசைப்படும் பெண்கள் எங்களை தாராளமாக அணுகலாம்!"

- இரா. முத்துக்குமார்

கலகல...

# நீங்கள் கேட்ட பாடல்!



**சன்** டீ.வி.யில் விஜயசாரதி நடத்தும் 'நீங்கள் கேட்ட பாடல்' நிகழ்ச்சியை ஒரு வாரம் மட்டும் நமது சூப்பர் ஸ்டார் ரஜினிகாந்த் நடத்த ஒப்புக் கொண்டார். அன்றைக்கு அவர் சந்திக்கவிருந்தது மூன்று பிரபலங்கள். முதல் நபர் டாக்டர் ராமதாஸ்.

**ரஜினி** : *(மைக்கை ராமதாஸ் முன் நீட்டியபடி)* : விஷ்க்.. விஷ்க்.. *(கையால் சல்யூட் அடிக்கிறார்)*

**ராமதாஸ்** : எனக்கு இந்த சிக்னலெல்லாம்... மன்னிக்கணும், சைகையெல்லாம் பிடிக்காது. சொல்ல வர்றத நேரடியா சொல்லுங்க.

**ரஜினி** : நான் எப்பவும் சொல்றதைத்தான் செய்வேன். செய்றதைத் தான் சொல்லுவேன்.

**ராமதாஸ்** : என்னத்த சொல்ல வந்து, இப்ப செஞ்சு காட்டினீங்க?

**ரஜினி** : நம்ம மரபுப்படி உங்களுக்கு வணக்கம் சொன்னேன்.

**ராமதாஸ்** : தமிழ் மரபுப்படி நீங்க கையைக் குவிச்சு கும்பிட்டிருக்கணும்.

**ரஜினி** : அட இன்னாயா உங்க கிட்ட படா பேஜாராப் போச்சு!



**ராமதாஸ்** : எனக்கும் உங்கள மாதிரி கொச்சைத் தமிழ்ல பேசத் தெரியும். ஆனா நான் பேச மாட்டேன். ஏன்னா நான் மறத் தமிழன்.

**ரஜினி** : அதான் ஊருக்கே தெரியுமே நீங்க 'மர'த்தமிழன்னு.

**ராமதாஸ்** : கிண்டல் பண்ணாம ஒழுங்கா நிகழ்ச்சிக்குப் போங்க!

**ரஜினி** : சரி சரி.... உங்களுக்குப் பிடிச்ச நடிகர் யாரு?

**ராமதாஸ்** : நிச்சயமா நீங்க இல்ல!

**ரஜினி** : பிடிச்ச நடிகை?

**ராமதாஸ்** : தமிழ் ஒழுங்கா பேசுற எல்லா நடிகையும் பிடிக்கும்!

**ரஜினி** : பிடிச்ச படம்?

**ராமதாஸ்** : தமிழ், தமிழச்சி தமிழன்!

**ரஜினி** : இப்ப என்ன பாட்டு கேக்கப் போறீங்க?

**ராமதாஸ்** : 'ராஜாதி ராஜா' படத்துல 'எங்கிட்ட மோதாதே..!' பாட்டு.

**ரஜினி** : ஐ நம்ம பாட்டு! யாருக்கு இதை டெடிகேட் பண்றீங்க?

**ராமதாஸ்** : ஈ.வி.கே.எஸ். இளங்கோவனுக்கு.

***அ**டுத்து ரஜினி சந்தித்த வி.ஐ.பி. ஜெயலலிதா.*

**ரஜினி** : ஹவ் ஆர் யூ மேம்?

**ஜெ** : மிஸ்டர் ரஜினி! நீங்க சந்திரமுகில எந்த பஞ்ச் டயலாக்கும் பேசாததாலதான், நீங்க கேட்ட உடனே இந்த நிகழ்ச்சிக்கு ஒப்புக்கிட்டேன்.

**ரஜினி** : தேங்க்யூ! தேங்க்யூ!

**ஜெ** : ஆமா, பச்சை கலர்ல மைக் கெடைக்காதா?

**ரஜினி** : இல்லைங்க... இந்த கறுப்பு, மைக் செய்யும்போதே அடிச்ச கலரு. பொறந்த கலரு, மாறாது.

**ஜெ** : சரி, நீங்களாவது பச்சை டிரெஸ் போட்டுட்டு வந்திருக்கக் கூடாதா?

**ரஜினி** : அது எனக்குப் பிடிக்காது!

**ஜெ** : ஏன்?

**ரஜினி** : அது எனக்கு ராசியில்ல!

**ஜெ** : ரொம்பத்தான் நக்கல் பண்றீங்க... நிகழ்ச்சிக்குப் போகலாம்.

**ரஜினி** : உங்களுக்கு எந்த நடிகரைப் பிடிக்கும்?

**ஜெ** : தினம் ஒரு வேஷம் போடுற மிஸ்டர் கருணாநிதியைத்தான்.

**ரஜினி** : பிடிச்ச நடிகை?

**ஜெ** : நான்தான்!



கற்பனை



திரிகையாளர் கூட்டம் இல்ல..

**விஜய** : சாரி, சாரி ரஜினி... கொஞ்சம் உணர்ச்சி வசப்பட்டுட்டேன்.

**ரஜினி** : கொஞ்சம் இல்ல... ரொம்பவே பட்டீங்க...

**விஜய** : என்ன பண்றது, என்னால சினிமாவை விட்டு வெளில வர முடியல!

**ரஜினி** : குகைய விட்டு போஸ் கொடுத்துக்கிட்டே நான் வரலியா? மனசிருந்தா மார்க்கம் உண்டு!

**விஜய** : மார்க்கம் யாருக்கு வேணும்? நாற்காலி கிடைக்குமா?

**ரஜினி** : கிடைக்குமே.. JFAல விசாரிச்சீங்களா?

**விஜய** : கருணாநிதிகிட்டதான் விசாரிச்சேன்!

**ரஜினி** : என்ன சொன்னார், அவர் வீட்டுக்கும் அங்கதான் ஃபர்னிச்சர் வாங்கினாராமா?

**விஜய** : உங்க குசும்புக்கு ஒரு அளவே இல்லாம போயிடுச்சி... வாங்க நிகழ்ச்சிக்குப் போகலாம்.

**ரஜினி** : பிடிச்ச நடிகர் யாரு விஜி?

**விஜய** : கமல்தான்...

**ரஜினி** : ஏன்?

**விஜய** : உங்களுக்குக் கோபம் வரணுமே!

**ரஜினி** : பிடிச்ச நடிகை?

**விஜய** : சிம்ரன்!

**ரஜினி** : ஏன்?

**விஜய** : கமலுக்குக் கோபம் வரணுமே!

**ரஜினி** : ரசிகர்களுக்குக் கோபம் வர்றதுக்கு முன்னாடி பிடிச்ச பாட்டைச் சொல்லுங்க.

**விஜய** : அம்மா என்றழைக்காத உயிரில்லையே...

**ரஜினி** : குட்... எனக்குத்தானே டெடிகேட் பண்ணப் போறீங்க?

**விஜய** : அதான் இல்ல....

**ரஜினி** : அம்மாவுக்கு?

**விஜய** : இல்ல... கருணாநிதிக்கு!

**ரஜினி** : ஏன்?

**விஜய** : அவருக்குக் கோபம் வரணுமே!

**(விஜயகாந்த் லக்கலக்கவென சிரிக்கிறார்)**

**ரஜினி** : பிடிச்ச படம்?

**ஜெ** : நான் ஆணையிட்டால், எவனோ யிருந்தா எனக்கென்ன!

**ரஜினி** : இப்ப என்ன பாட்டு கேக்க விரும்பறீங்க?

**ஜெ** : 'அடிதோழி அடி தோழி'தான்! இதை என் தோழி சசிக்கு டெடிகேட் பண்றேன்.

**கடைசியாக சூப்பர் ஸ்டார் சந்தித்தது விஜயகாந்தை....**

*(ரஜினி மைக்கை நீட்டும் முன்பே விஜயகாந்த் ஓடி வந்து மைக் முன்னாடி நின்று பேச ஆரம்பித்து விடுகிறார்)*

**விஜய** : செப்டம்பர்ல நான் கட்சி ஆரம்பிக்கப் போறேன்... டிசம்பர்ல மாநாடு போடப்போறேன்...

**ரஜினி** (சட்டென்று சுதாரித்து மைக்கை கையால் மூடி) : விஜி, இது நீங்கள் கேட்ட பாடல் நிகழ்ச்சி... பத்

**- தெனாலி**

# SRI LAXMI MUTHU MAALIGAI

## *Cool Cool Sale*

**Upto 25% Discount!** **Limited Offer Hurry!!**






**Buy Rs.999/- and above**



## Get 1 set of ½ gm Gold Forming Bangles (4 Nos.) FREE

---

பல ரகங்களில் முத்து, பவளம் அமெரிக்கன் டைமண்ட் நவரத்தின மற்றும் ஜெய்ப்பூர் மாலைகள் ஸ்படிக மாலைகள்

**Polki, Kundan, 1 gm & 2 gm Gold Forming Jewellery**

**All Credit Cards Purchasers will Get Extra Surprise Gift**

## LMM LAXMI MUTHU MAALIGAI

Shop No.8, 9, Ground Floor,
Kasi Arcade,
No.116, Thiyagaraya Road, T.Nagar,
Chennai - 17.
Ph : 28150856 / 28155650

Also at : Sri Sakthi Plaza,
Shop No.1 Basement No.70,
Pondy Bazzar, Next to Maya's Plaza
T.Nagar, Chennai - 17
Ph : 28153383 / 28153393

இதே போன்ற பெயர் உள்ள வேறு கடைகளுக்கு சென்று ஏமாற வேண்டாம். எங்கள் ஆதரவு உங்களுக்கு எப்போதும் உண்டு.

## Pearl Bazaar at Pondy Bazaar :

O.No.51, N.No.97, 1st Floor, Pondy Bazar, (Near to Ratna Store), T.Nagar, Chennai - 17.

## இளமைத் தொடர்

# உள்ளம் துறந்தவன்

26

மஞ்சரிக்கு அதைக் கேட்டதும் யதார்த்தத்தைக் கண்ணுக்குக் கண் சந்திக்கும் ஐஸ் கத்தி தாக்கியது.

"சொல்றதுக்கு தயக்கமா இருக்கு. கேட்கறதுக்கான மன தைரியம் உங்களுக்கு இருக்கும்னு நம்பறேன். யார் கிட்டயாவது நான் சொல்லியே ஆகணும். செத்துருவேன்."

''பீடிகை வேண்டாம் சொல்லுங்க'' என்றாள் கிணற்றுக் குரலில்.

''அழகேசன் உங்களை ஆஸ்பத்திரியில சந்திச்சிட்டு வெளிய வந்தான் பாருங்க. ஃபோயர்லருந்து மெல்ல சரிவில இறங்கினான். ரோடுக்கு வந்து நடந்துக்கிட்டிருந்தான். பஸ் பிடிக்க குறுக்க கடந்தான். நான் கொஞ்ச தூரத்தில பழரசக் கடையிலிருந்து பாத்துக்கிட்டிருக்கேன். என் ஆபீசுக்கு போன் பண்ணேன். 'இனிமே நீ அழகேசனைப் பின் தொடர வேண்டாம். இன்சாஃப் கம்பெனில நிறுத்தச் சொல்லிட்டாங்க. காண்ட்ராக்டை கேன்சல் பண்ணிட்டாங்கன்னாங்க. பேசாம ஆபீசுக்கு வா'ன்னாங்க. அப்ப ஒரு ஆம்னி வந்துச்க. நம்பரை நோட் பண்ணிருக்கேன். பன்னிரண்டு பதினாறு. ரெண்டு பேர் எறங்கினாங்க. அழகேசனை மூர்க்கத்தனமா உள்ள தள்ளி உக்கார வச்சாங்க. முகத்தைப் பொத்தினாங்க. மண்டைல கட்டப்பாரை மாதிரி கனமான பொருளால அடிச்சாங்க. அவன் அப்படியே சரிஞ்சான். சர்ருனு கிளப்பிட்டுப் போனாங்க. பின்னாலயே ட்ராஃபிக் போலீஸ் கொஞ்ச நேரத்தில கூட வருது. எனக்கு வினோதமா இருந்திச்க. நான் விடலை. பின்னாலயே பைக்ல பின் தொடர்ந்தேன். இசிஆர் ரோடு பக்கம் போனாங்க. டோல் பே பண்ணிட்டு, கானத்தூர் தாண்டி கேளம்பாக்கம் போற பாதையில திரும்பிட்டாங்க. போலீஸ் வேன் நேராப்



போயட்டுது. இவங்க ஆள் நடமாட்டம் இல்லாம, உப்பளம் இருக்கு பாருங்க, அங்க நிறுத்தினாங்க. நான் பாத்துக்கிட்டிருக்கப்ப ஒரு ஆம்புலன்ஸ் சொல்லி வச்சாப்பல வருது. அழகேசனை மாருதி வேன்லருந்து ஆம்புலன்ஸ்க்கு ரெண்டு பேர் பிடிச்சுக்கிட்டு படுத்த நிலையில மாத்தினாங்க. அவன் தலை சாய்ந்திருந்தது. கண் மூடியிருந்தது. மண்டைல நல்லா அடிச்சிருக்காங்க போல. அப்புறம் ரெண்டு வண்டியும் ஆம்புலன்ஸ் ஊளையிட புறப்பட்டுருச்சு. அந்த இடத்தில என்னவோ கிடந்தது. நான் பைக்கை நிறுத்திட்டு கிட்ட போய் பார்க்கறேன், அழகேசனுடைய பை. அதில அந்த புஸ்தகம் இருந்திச்சு." அவன் நீண்ட பெருமூச்சு விட்டான்.

"உங்கப்பாவுடைய ஆபரேஷனை சுத்தி நடந்த மிக மிகப் பெரிய பல நூறு கோடி ரூபாய் வியாபாரத்துல அழகேசன் பலி கொடுக்கப்பட்டவர், எல்லாரும் உடந்தை. போலீஸ், டாக்டர்ங்க அத்தனை பேரும் விலைக்கு வாங்கப்பட்டிருக்காங்க."

மஞ்சரியின் நாக்கு வறண்டிருந்தது. மூச்சு முட்டியது. மளமளவென்று தண்ணீர் குடித்தாள். உடையெல்லாம் நனைந்தது.

"ஆர் யு ஆல்ரைட்? மேல சொல்லட்டுமா?" தலையசைத்தாள்.

"உங்கப்பாவுக்கு உடல் நலம் குறைந்த நிலையில் ஸ்டாக் வேல்யு மளமளன்னு சரிய, பரபரப்பா எல்லாரும் விக்கத் தொடங்க, 'ஸீகல் ட்ரேடிங்'னு ஒரு டம்மி கார்ப்பரேஷன் பேர்ல, மார்க்கெட்ல உள்ள இன்சாஃப் ஷேரையெல்லாம் வாங்கிட்டாங்க. இப்ப உங்கப்பாவுக்கு ஆபரேஷன் வெற்றிகரமா முடிஞ்ச நிலையில மறுபடி ஸ்டாக் நிலை ஏறிக்கிட்டு வருது. சரியான சமயத்தில வித்துருவாங்க. எல்லாம் ஒண்ணுக்குள்ள ஒண்ணு. இன்ஸைடர் ட்ரேடிங்னு பேரு."

"இது சட்ட விரோதமானது இல்



சுஜாதா

"நல்லதே உன் கண்ணுக்குப் படாதுன்னு கேப்பீங்களே... இன்னிக்கு பட்டுடுச்சு!"

"அப்படி என்னத்த பார்த்தே?"

"தோட்டத்துல வச்சு ஒரு 'நல்ல பாம்பை' பார்த்தேனே!"

**- எஸ். சக்திகுணசீலன்**



லையா?"

"ஆமாம். இதையெல்லாம் கண்காணிக்கும் நிறுவனமான செபி அதை விசாரிச்சா, வண்டவாளம் வெளிப்படும். சம்பந்தப்பட்டவங்க எல்லாரையும் ஜெயில்ல போடலாம்."

"நீங்க இதில எனக்கு உதவி செய்வீங்களா?"

"ஆளை விடுங்க. ஏற்கெனவே அதிகப்படியா தெரிஞ்சு வச்சிருக்கேன். உயிருக்கு ஆபத்து. கொஞ்ச நாள் தலைமறைவா இருந்தே ஆகணும். இல்லை, நாகரத்தினம் ஆளுங்க என்னை அடிச்சே கொன்னுடுவாங்க."

"நான் என்ன செய்யணும்?"

"கொஞ்ச நாளாவது கண்டுக்காம இருங்க."

"பரமேஸ்வரன் மாமா அப்படித்தான் சொன்னார். பரமேஸ்வரன் இதில உடந்தையா?"

"சேசே, அந்தாளு அப்பிராணி! தயிர் சாதம் சாப்பிடறவங்க இந்த மாதிரி குற்றத்தில் இறங்க மாட்டாங்க. இது பெரிய கை. பார்கவா, பாம்பே சோட்டா, சிப்பி, தாமோதரன், அப்புறம் துபாய் கனெக்ஷன், லண்டன் கனெக்ஷன், நியூயார்க் எல்லாம் இருக்கு, ருத்லஸ்."

"இவங்களுக்குப் பயந்துக்கிட்டு 'சிம் கார்டைப் பிடுங்கிப் போட்டுட்டேன். தலைமறைவா இருந்தே ஆகணும் இல்லை, தலை போயிடும்."

"மஞ்சரி, ஒரு அளவுக்கு மேல சம்பாதிக்கணும்னா, குற்றங்கள் பல செய்தே ஆகணும். முன்னூறு கோடியெல்லாம் ஒரு ஆளால சட்டத்துக்குள்ள பத்து வாழ்நாள்லகூட சம்பாதிக்க முடியாது. அதை ஒரு மாதத்தில சம்பாதிக்கணும்னா, பலி விழுந்துதான் ஆகணும். வரேன். உங்களுக்கு இதுக்கு மேல உதவி செய்ய இப்போதைக்கு தைரியம் இல்லை, ஸாரி!" சட்டென்று புறப்பட்டான்.

அன்றிரவு மஞ்சரியின் கனவில் அழகேசன் வந்தான். ஒரு பாம்பை பத்துப் பேர் துரத்தி அடிப்பதைத் தடுத்து நிறுத்தி "ஏண்டா அதை அடிக்கறீங்க? உனக்கு இந்த உலகத்தில் வாழ எவ்வளவு உரிமை இருக்கோ அவ்வளவு அதுக்கும் இருக்கு. இந்தப் பாம்பு விஷமில்லாத தண்ணிப் பாம்பு."

"உன் உரிமையைப் பறிச்சுட்டாங்களே அழகி!"

"அதனால பரவாயில்லை. அதுக்கான பலனை அனுபவிப்பாங்க. பொயட்டிக் ஜஸ்டிஸ்னு ஒண்ணு இருக்கில்ல? சொல்லு, வினை விதைத்தவன் என்ன ஆவான்?"

அவனுக்குப் பதில் சொல்வதற்குள் "மஞ்சள் அழகி, எனக்கு நேரமாச்சு. தாத்தாக்களை வச்சு ஒரு நாடக ஒத்திகை பாத்துக்கிட்டிருக்கேன். பேரு டெத்" என்று டிரைவர் இல்லாத பஸ்ஸில் ஏறிச் சென்றான்.

வியர்வையில் குளித்தெழுந்தாள். ஹாலில் சன்னமான குரலில் டெலிபோனில் யாரோ பேசுவது கேட்டது. அதன் எக்ஸ்டென்ஷனை ஓசைப்படாமல் எடுத்து காதில் வைத்துக்கொண்டாள்.

"ரொம்ப ப்ராப்ளம் கொடுக்கப் போறதுன்னுதான் தோணுது. மறுத்தா கையெழுத்தை நாமே போட்டுட வேண்டியதுதான். பெரியவர் மறுபடி ஆபீஸ் வரதுக்குள்ள போர்டு மெம்பர்களை மாத்திடணும். எத்தனை ப்ராக்ஸி வாங்க முடியுமோ வாங்கிடு."

"பொண்ணு ஏதாவது ஏடாகூடமா செய்துட்டா?"

"காதலன்கிட்ட அனுப்பிட வேண்டியதுதான். இப்பவே சூசைடு ரேஞ்சுக்குப் போனாலும் ஆச்சரியமில்லை. உளவு பாத்த பையன் புத்தியைக் காட்ட இருந்தான். தட்ன தட்டுல தலைமறைவாய்ட்டான். என் ப்ரின்சிப்பிள் அனாவசியமா ஒருத்தரைக் கொலை செய்யக்கூடாது, அவசியமானதை போட்டுத் தள்ளிடணும். இதில இண்ட்ரஸ்டிங்கான விஷயம், அழகேசன் பேர்ல ஒரு பெரிய ஹார்ட் ஸ்பெஷாலிட்டி ஆஸ்பத்திரி திறக்கறதை பெரியவர் எங்கிட்ட ஒப்படைச்சிருக்கார்! பட்ஜெட் கேட்டிருக்கார்."

மஞ்சரி தீர்மானித்து விட்டாள்.

அப்போது நடுராத்திரி. நிதானமாக இறங்கி வந்தாள். "மாமா!"

நாகரத்தினம் திடுக்கிட்டார். "என்ன கண்ணு, தூக்கம் வரலியா?"

"எல்லாரையும் கூப்பிடுங்க"

"என்ன விஷயம்?"

"எல்லாரையும் கூப்பிடுங்க. கையெழுத்துப் போடற விஷயமா கொஞ்சம் பேசணும்."

"அது ஒண்ணுமில்லை கண்ணு. ஷேர்ங்களை எல்லாம் டிமேட் பண்ணி வெச்சிருக்கிறதால, அவங்களுக்கு ஒரு ஆத்தரைசேஷன் லெட்டர் கொடுக்கணும். அவ்வளவுதான்."

"எல்லாரையும் கூப்பிடப் போறீங்களா இல்லையா?" என்று உச்சக் குரல் அதட்டினாள். நாகரத்தினம் அவளைச் சந்தேகத்துடன் பார்த்து "யாரை, யாரை?"

"எல்லாரையும்" சற்று நேரம் அழுதாள்.

"காலைல பேசலாம் போய்த் தூங்கு. ரொம்ப மனக்கலக்கமா இருக்காப்ல. உன் வருத்தம் புரியுது கண்ணா. சரவணனையோ, விஜியையோ கல்யாணம் செய்துக்கிட்டா உனக்கு மனநிம்மதி கிடைக்கும். அவங்களும் உன்னை நல்லா பாத்துப்பாங்க. ஒண்ணும் குடி முழுகிப் போகலை."

"கையெழுத்து போடலைன்னா கொன்னுடுவீங்களா மாமா"

"என்ன சொல்ற?"

"அழகேசனை கொன்னாப்பல."

அவர் நெற்றி சுருங்கியது "அழகேசன்? கொன்னமா? என்ன உளர்றே? இதெல்லாம் உனக்கு யார் தப்புத் தப்பா சொல்றாங்க, பாரு நாளைக்கு எழுந்த உடனே போலீஸ் ஸ்டேஷன் போவோம். எஃப்.ஐ.ஆர் பதிவாகியிருக்கு. அழகேசனுக்கு நடந்தது ஒரு விபத்து. அவன் பயன்படுத்தின மோட்டார் சைக்கிள் அங்க கிடக்குது. விபத்தைப் பாத்தவங்க வாக்குமூலங்கள் பதிவாகியிருக்கு."

"அப்படியா? நீங்க அவனைக் கொல்லலையா?"

"லூஸ்த்தனமா பேசாதே. பாரு, அவன் விபத்தில் இறந்துபோய் பெரியவருக்கு அவன் இதயம் பொருந்தியிருந்தது ஒரு தற்செயலான விஷயம். இந்த மாதிரியும் சந்தேகம் வரும்னுதான் நாளைக்கே எல்லா ரிக்கார்டையும் காட்டறேன். ஆஸ்பத்திரில சர்ட்டிபிகேட் கொடுத்தவங்க எல்லாம் பெரிய பெரிய டாக்டருங்க. அவங்க ரிப்போர்ட்டையும் காட்டச் சொல்றேன். அவனைக் காப்பாத்த நாங்க பண்ற முயற்சிங்களையெல்லாம் கேட்டின்னா அப்படியே உருகிப் போயிருவே."

மஞ்சரி மௌனமாக இருந்தாள்.

சற்று நேரம் யோசித்து விட்டு "நீங்க சொன்னா சரி" என்றாள்.

(தொடரும்)



"உங்களுக்கும் ஷுகர் இருக்கா?"

"எப்படிக் கண்டு பிடிச்சீங்க?"

"என் மருமக மாதிரியே உங்க மருமகளும் தினமும் ஆபீஸ் விட்டு வரும்போது விதவிதமா ஸ்வீட் வாங்கிட்டு வர்றாளே!"

- சந்திரசேகர்

## ஜெயித்த கதை

**பர்சனாலிட்டி டெவலப்மென்ட் மற்றும் ஆங்கிலம் பேச பயிற்சியளிக்கும் ஐ.எஸ்.ஓ சான்றிதழ் பெற்ற முன்னணி நிறுவனம் Zeal. இதன் நிறுவனரான ராஜன், இன்றைக்கு வெற்றிகரமான மனிதராகத் திகழ்ந்தாலும், வாழ்க்கையில் அவர் சந்தித்த சவால்கள், சோதனைகள் கொஞ்ச நஞ்சமல்ல. தாம் ஜெயித்த கதையை, ராஜனே மனம் திறந்து நம்மிடம் விவரிக்கிறார்...**






“எங்கள் குடும்பத்துக்குச் சொந்தமாக காபி எஸ்டேட் உண்டு. வசதியான குடும்பம். நான் பிறந்து வளர்ந்தது எல்லாம் மதுரையில்தான். எனக்கு இரண்டு அண்ணன்கள். பெரிய அண்ணன் அதி புத்திசாலி. இரண்டாவது அண்ணன் படிப்பில் கெட்டிக்காரன். கடைசிப் பையனான நான் ரொம்ப சுமார் ரகம். தமிழ் மீடியம் பள்ளியில்தான் என்னைப் படிக்க வைத்தார்கள். மூத்த மகன்கள் இரண்டு பேரும், படித்து, பெரிய உத்தியோகம் பார்க்கப் போய்விட்டால், எஸ்டேட்டைப் பார்த்துக்கொள்ள யாராவது வேணுமே! அதற்கு நான்தான் என்று என் சிறுவயதிலேயே வீட்டில் தீர்மானித்து விட்டனர். இதனால் எனக்கு சின்ன வயதிலேயே ஒருவித தாழ்வு மனப்பான்மை ஏற்பட்டுவிட்டது என்று சொல்லலாம்.

தமிழ் மீடியத்தில் எட்டாம் வகுப்பு வரை படித்து முடித்தவுடன், ஒன்பதாம் வகுப்புக்குப் போன போது, அங்கே ஆங்கில மீடியம். எட்டாம் வகுப்பு வரை, ஆங்கிலத்தையே தமிழில்தான் சொல்லிக் கொடுப்பார்கள். எனவே, ஒன்பதாம் வகுப்பில் சேர்ந்தவுடன் ஒன்றும் புரியவில்லை.

என் அப்பா எம்.ஏ. ஆங்கில இலக்கியம் படித்தவர். ஆனாலும் அவரிடம், என் பிரச்னையைச் சொல்ல பயம். என் பிரச்னைக்கு ஒரு சின்ன தீர்வு கண்டுபிடித்தேன். எங்கள் வீட்டுக்கு அருகில் இருந்த ஒரு ஆங்கிலோ இந்திய தம்பதியின் வீட்டுக்கு தினமும் போக ஆரம்பித்தேன். அவர்கள் பேசுவதை சும்மா கேட்டுக் கொண்டிருப்பேன். சில ஆங்கில வார்த்தைகளைப் பயன்படுத்திப்

# “ஹார்ட் அட்டாக்கோடு

பேச எனக்கும் தைரியம் வந்தது. சில நாட்களுக்குப் பிறகு, 'என் பெயர் ராஜன். நான் ஒன்பதாம் வகுப்பு படிக்கிறேன்...' என்கிற ரீதியில் நாலுவரி நானாக இங்கிலீஷ் பேசிய தினம், எனக்கு ஏற்பட்ட சந்தோஷத்தை ஆயுசுக்கும் மறக்க முடியாது.

எங்கள் அப்பாவிடம் பாராட்ட வேண்டிய குணம் ஒன்று உண்டு. அது மற்றவர்களை உற்சாகப்படுத்துகிற, ஊக்கம் அளிக்கிற குணம். நானாகவே ஆங்கிலத்தில் பேசுவதற்கான முயற்சிகள் செய்வதைப் புரிந்துகொண்ட அவர், ஒரு ஞாயிற்றுக் கிழமை, என் கையில் பணத்தைக் கொடுத்து, தியேட்டரில் ஆங்கிலப்படம் ஒன்றைப் பார்க்க அனுப்பி வைத்தார். தியேட்டரிலிருந்து திரும்பியவுடன், "படத்தின் கதையைச் சொல்லு" என்றார். படத்தில் மூணு ஃபைட்டிங், ரெண்டு சேஸிங் சீன்'' என்றுதான் பதில் சொல்ல முடிந்ததே தவிர, கதையெல்லாம் சுத்தமாய்ப் புரியவில்லை. ஆனாலும் அப்பா, ''மனம் தளராதே! உனக்கு இங்கிலீஷ் வரும்!'' என்று சொல்லி, வாரா வாரம் மதுரையின் 'ரீகல்', 'பரமேஸ்வரி' திரையரங்குகளில் ஞாயிற்றுக் கிழமைகளில் ஆங்கிலப் படம் பார்க்க அனுப்பி வைத்தார்.

சீக்கிரமே, படங்களின் கதை எனக்கு இலேசாகப் புரிய ஆரம்பித்தது. ஒருநாள், படம் பார்த்து விட்டு வந்தபோது, வழக்கப்படி கதை சொன்னேன். ஒரு குறிப்பிட்ட கேரக்டரின் பெயர் என்ன என்று கேட்க, நான் பதில் தெரியாமல் விழிக்க, 'மறுபடியும் போய் படத்தைப் பார்த்து விட்டு வா!' என்று அனுப்பி விட்டார். படம் பார்த்துவிட்டு, திரும்பி வந்து கேரக்டரின் பெயரைக் குறிப்பிட்டு கதை சொல்லிக் கொண்டிருந்தபோது, 'இரண்டு குழுவினருக்கிடையே சண்டை' என்றேன். உடனே அப்பா, "எதற்காக அவர்கள் சண்டை போட்டார்கள்?" என்று கேட்டார். நான் பேசாமல் நின்றேன். அவ்வளவுதான், மறுபடியும் சினிமாவுக்கு அனுப்பி விட்டார்.

சினிமா தவிர, நிறைய புத்தகங்களை என்னிடம் கொடுத்து படிக்க வைத்தார்.

ப்ளஸ் டூ பரீட்சையில் நான் ஃபெயில் ஆனேன். டுடோரியல் காலேஜில் அடியெடுத்து வைத்தபோது, குடும்பத்தில் முதல் தடவையாய் நான் ஒரு டுடோரியல் காலேஜில் சேரும்படி ஆனதற்காக வருத்தப்பட்டேன். ப்ளஸ் டூ தேறிய பின், தியாகராஜர் கல்லூரியில் பி.பி.ஏ சேர்ந்தேன். கெட்ட சவகாசம். படிப்பில் கவனம் செலுத்தவில்லை. ஒரு வழியாக பட்டம் வாங்கினேன். அடுத்து எம்.பி.ஏ. படிக்க ஆசைப்பட்டேன். நுழைவுத் தேர்வில்



# பாடமெடுத்தேன்!"

ராஜன்

"என்னை மொதல்ல ஒரு வக்கீல் மாப்பிள்ளைக்கு கட்டித் தர்றதா இருந்தது... என் கெட்ட நேரம்... உங்ககிட்ட வந்து மாட்டிக்கிட்டேன்..."

"உன் கெட்ட நேரம் இல்ல... வக்கீலோட நல்ல நேரம்."

- குட்டி பிரசன்னா



வெற்றி பெற முடியவில்லை. மறுவருடம் கடுமையான உழைப்புக்குப் பின் முயற்சி செய்தேன். எழுதிய அனைத்து நுழைவுத் தேர்வுகளிலும் தேர்ச்சி பெற்றாலும், மதுரை பல்கலைக் கழகத்தில்தான் எம்.பி.ஏ சேர்ந்தேன். 86ம் வருடம், வெற்றிகரமாய் எம்.பி.ஏ முடித்தேன்.

இடையில் நான் சந்தித்த ஒரு பெண்ணுடன் காதல் ஏற்பட்டது. இருவரும் வெவ்வேறு ஜாதி. எம்.பி.ஏவை முடித்து, நல்ல குவாலிபிகேஷனுடன் காதலி வீட்டுக்குப் போய் பெண் கேட்டால் சுலபமாய் சம்மதம் வாங்கி விடலாம் என்று கணக்குப் போட்டேன். காதலியின் பெற்றோரை அணுகியபோது, "வெறும் படிப்பால் என்ன பிரயோஜனம்? வேலை இல்லையே!" என்றார்கள். மதுரையிலேயே ஒரு கூரியர் கம்பெனியில் மார்க்கெட்டிங் எக்ஸிகியூடிவ்வாகச் சேர்ந்துவிட்டு, காதலியின் வீட்டுக்குப் போய், "வேலையில் சேர்ந்து விட்டேன்" என்றேன்.

"ப்பூ! சாதாரண வேலைதானே!" என்றார்கள். சென்னைக்கு வந்து, கூரியர் கம்பெனியின் உயர் அதிகாரியைப் பார்த்து, "ஒரு கிளையின் மேனேஜராகப் பதவி உயர்வு வேண்டும்" என்றேன். நான் கிளை மேனேஜர் பதவிக்கு எவ்வாறு தகுதியானவன் என்று விளக்கினேன். "இரண்டு ஆண்டுகளில் இவ்வளவு பிசினஸ் காட்டினால் பதவி உயர்வு" என்று சொல்லி, இலக்கு நிர்ணயம் செய்தார்கள்.

ஊருக்குப் போய் காதலியிடம், "இரண்டே வருஷம் காத்திரு! நீ மேனேஜர் மனைவிதான்" என்றேன். காதலியோ "இரண்டு வருடம் உங்களுக்காக நான் காத்திருப்பேன். ஆனால், எங்கள் வீட்டில் காத்திருக்க மாட்டார்களே! அதிகபட்சம் ஒரு வருஷம்!" என்று சொல்லிவிட்டாள்.

மறுபடி சென்னை விஜயம். "இரண்டு வருஷ இலக்கை ஒரே வருஷத்தில் சாதித்தால், ஒரே ஆண்டில் பதவி உயர்வு தருவீர்களா?" என்று கேட்டேன். நம்பிக்கையில்லாமல், 'ஓ.கே' சொன்னார்கள். மதுரை திரும்பிய நான், தினமும் நாற்பத்தெட்டு மணி நேர உழைப்புக்குத் தயாரானேன்.

எனக்குக் கீழே கிளையில் பணிபுரிந்து கொண்டிருந்த அனைவரையும் அழைத்துப் பேசினேன். எப்படி எப்படி எல்லாம் 'கிரியேடிவ்' ஆக வேலை செய்து பிசினஸை வளர்க்கலாம் என்று விளக்கினேன். சுருக்கமாய் சொல்லப் போனால், டெலிவரி பையன் முதல் அக்கவுண்ட்ஸ் மேனேஜர் வரை அனைவரையுமே 'மார்க்கெட்டிங்' மனிதர்களாக உருமாற்றினேன். இந்தப் புது முயற்சியில் அனைவரும் உற்சாகமாய் கை கொடுத்தனர். அடுத்த சில மாதங்களில், மாதம் நிகர நஷ்டம் பத்தாயிரம் என்ற நிலையிலிருந்த கிளை, எழுபதாயிரம் லாபம் ஈட்டியது. இந்தியாவிலேயே ஒரு முன் மாதிரிக் கிளை என்ற சிறப்பைப் பெற்றது. பதவி உயர்வு தேடி வந்தது. சாதனை படைக்க ஊக்கமூட்டிக் கொண்டிருந்த காதல், இனிதே கல்யாணத்தில் முடிந்தது.

வாழ்க்கையில் என்னாலும் ஜெயிக்க முடியும் என்று காட்டிய நான், விரைவிலேயே வாழ்க்கையில் இன்னும் சில உண்மைகளையும் புரிந்துகொண்டேன். படிப்பில் அபாரமாக விளங்கிய என் இரண்டாவது அண்ணன், படிப்பினை முடித்துவிட்டு, வாழ்க்கையின் சில யதார்த்தங்களைச் சந்திக்க நேர்ந்தபோது, மனநிலை பாதிப்புக்குள்ளாகி, தற்கொலை செய்து கொண்டு விட்டார்.

மேலும், என் தந்தையின் மரணத்துக்குப்

பின் மிகவும் தனிமையாக உணர்ந்த என் அம்மாவை, அவரது படிப்போ, குடும்பத்து வசதிகளோ காப்பாற்றவில்லை. அவரும் கிணற்றில் விழுந்து தற்கொலை செய்து கொண்டுவிட்டார்.

படிப்பு, வசதி எல்லாம் இருந்தும்கூட, எங்கள் குடும்பத்தில் நிகழ்ந்துவிட்ட மரணங்கள் என்னை மிகவும் பாதித்தன. வாழ்க்கை என்பது படிப்பு, சௌகரியங்களுடன் முடிந்து விடுவதில்லை என்று புரிந்துகொண்டேன். எனக்குள்ளே ஒரு தேடுதல் வேட்கை ஏற்பட்டது. வாழ்க்கை என்பது அர்த்தம் கொண்ட ஒன்றாக இருக்க வேண்டும் என்று முடிவு செய்தேன். சாதாரண மக்களின் வாழ்க்கையை பன்முகப் பரிமாணம் பெறச் செய்து, அர்த்தமுள்ளதாக மாற்றுவதற்காகவே என்னை அர்ப்பணித்துக் கொள்வது என்று சபதம் ஏற்றேன். Zeal அமைப்பை 96ல் ஆரம்பித்தேன்.

மிகவும் சிரமப்பட்டு, பதினெட்டு பேரைத் திரட்டி (பாதி பேருக்குக் கட்டணம் கிடையாது), மதுரையில் 'பர்சனாலிட்டி டெவலப்மென்ட்' பயிற்சி நடத்த எல்லா ஏற்பாடுகளையும் செய்து முடித்தேன். முதல்நாள் வகுப்பு சிறப்பாக நடந்து முடிந்தது. இரண்டாவது நாள் வகுப்பு எடுத்துக் கொண்டிருந்தபோது, திடீரென்று நெஞ்சுவலி! சிரமப்பட்டு வகுப்பை முடித்துவிட்டு, டாக்டரிடம் போனபோது "உங்களுக்கு ஹார்ட் அட்டாக்" என்று குண்டைத் தூக்கிப் போட்டார்.

அப்புறம் ஆஸ்பத்திரி, ஆஞ்சியோ, சர்ஜரி என்று சில மாதங்கள் கழிந்தன. உடல்நலம் பெற்று வந்து வகுப்புகளைத் தொடர்ந்தேன். பர்சனாலிட்டி டெவலப்மெண்ட் பயிற்சி வகுப்புகளுடன் நிறுத்திக் கொள்ளாமல், சிறுவயதில் ஆங்கிலம் பேச கஷ்டப்பட்ட என்னைப் போன்றவர்களுக்கும் உதவிட நினைத்தேன். ஆங்கிலப் பேச்சுப் பயிற்சி வகுப்புகளையும் ஆரம்பித்தேன்.

இன்று Zeal மூலமாக, பணம் சம்பாதிக்கிறேன்; பல ஆயிரம் பேர்களுக்குப் பயிற்சியளித்து சாதனை படைத்திருக்கிறேன் என்பதையெல்லாம் விட, பலரது வாழ்க்கை அர்த்தமுள்ளதாக அமைய உதவி இருக்கிறேன். அதன்மூலம் என் வாழ்க்கை அர்த்த முள்ளதாகி இருக்கிறது என்பதில் தான் எனக்கு மகிழ்ச்சி."

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**

காதல் சிறகுகள்

# என்னை வசீகரிக்கும்

கோழைகளை எனக்குப் பிடிக்காது. குறிப்பாக காதல் கோழைகளை. தினம் தினம் தின சரிகளில் காதலுக்காக உயிர் விடுபவர்களைப் பார்த்து பலர் வருத்தப்படுவார்கள். நான் எரிச் சல்படுவேன். எதற்காக விலை மதிக்க முடியாத உயிரை இப்படி அநியாயமாய் இழக்க வேண்டும்? ஒருவன் உயிர் துறக்கத்தான் அதிக தைரியம் வேண்டும். அந்தளவு தைரியத்துடன் உயிரை விடத் துணிந்தவன், ஏன் அந்த தைரியத்தை வாழ்வதற்கு பயன்படுத்தக் கூடாது? இது ஆணுக்கென்று இல்லை... பெண்ணுக்கும்தான். சினிமா நட்சத்திரங்கள் கூட காதல் தோல்வியில் இந்த முடிவை நாடும்போது கவலையாக இருக்கும். இந்தக் காதல் கரை சேருமா, சேராதா என்று ஆரம்பத் திலேயே நமக்குத் தெரியும். உள்ளு ணர்வு நம்மிடம் நிச்சயம் சொல்லும். அந்த மனசாட்சியின் குரலை ஒரு நிமி டம் கேட்டு நடந்தால் எத்தனையோ இழப்புகளைத் தடுக்க முடியும். ஆனால், காதலின் வேகத்தில் அந்தக் குரலை நாம் அலட்சியப்படுத்தி விடுகிறோம் அல்லது புறக்கணித்து விடுகிறோம். திரு மணத்திற்காக காதலிக்கும் எண்ணம் போய், ஜாலிக்காக, பந்தாவுக்காக, சில்லறை சந்தோஷங்களுக்காக காதல் என்ற கலாசாரம் இன்றைக்கு வேரூன்றி விட்டது. சினிமா நடிகை இப்படிப் பேசுவது உங்களுக்கெல்லாம் ஆச்சரிய மாக இருக்கலாம். ஏன், சினிமா நடிகை பேசக்கூடாதா? அவளுக்கு மனசு இல் லையா? அதில் உணர்வுகள் இல்லையா?



சமீபத்தில் எனக்குத் தெரிந்த ஒருவரைச் சந்தித்தபோது, யதேச்சையாக காதல் பற்றி பேச்சு எழுந்தது. அவர் சொன்ன ஒரு சம்பவம் என்னை அதிர வைத்துவிட்டது. அவரின் நண்பர் ஒருவர், தன் எதிர்வீட்டுப் பெண்ணை விரும்பியிருக்கிறார். அப்பெண்ணும் இவரை நேசிக்க, காதல் தீ கொழுந்துவிட்டு எரிந்திருக்கிறது. ஆனால் இரண்டு குடும்பங்களுக்கும் தீராத பகை. ஊருக்குப் பயந்து, வீட்டுக்குப் பயந்து மிக மிக ரகசியமாக அந்தக் காதல் வளர்ந்திருக்கிறது.



# ராஜகுமாரன்!

உறுதியாக இருந்த அந்த ஜோடியிடையே திடீர் பயம். 'குடும்பங்களின் வேட்டையாடலில் காதல் சிதைந்து விட்டால் என்ன செய்வது?' என்று யோசித்திருக்கின்றனர். இங்குதான் டைரக்டர் மணிரத்னம் அவர்களுக்கு உதவி புரிந்திருக்கிறார். 'அலைபாயுதே' படத்தில் வருகிற மாதிரி பதிவுத் திருமணம் செய்துகொண்டு அவரவர் வீட்டில் இருந்துவிட முடிவெடுத்திருக்கின்றனர். உடனே செயல் வடிவம் கொடுத்து திருமணமும் முடிந்திருக்கிறது. ஆனாலும் பயம் மட்டும் நிழல் போல் தொடர்ந்து வந்திருக்கிறது. பெங்களூரில் செட்டிலாக விரும்பியிருக்கிறார்கள். முதலில் காதலன் போய் வீடு, மற்ற விஷயங்களை முடித்துவிட்டு பிறகு அவளை அழைத்துக் கொள்ளலாம் என்று திட்டம். அதன்படி அவன் பெங்களூர் போன அடுத்தநாளே, இங்கே இரண்டு வீட்டுக்கும் இவர்கள் விஷயம் கசிந்துவிட்டது. பெரிய ரகளை. பையனின் அக்காவும் பிறரும் அந்தப் பெண்ணை சொல்லொண்ணாத வார்த்தைகளால் வறுத்தெடுத்திருக்கின்றனர். அவமானம் தாங்க முடியாதவளால் மரணத்தைத் தாங்க முடிந்திருக்கிறது. ஆம்... நேரே சென்று தூக்கில் தொங்கிவிட்

சினேகா

டாள். காதலனுக்குத் தகவல் போய், வந்தான். பயண வழியிலேயே அவன் கண்ணீரெல்லாம் வற்றிப் போய்விட, பிரமை பிடித்தவன் மாதிரி வந்து சேர்ந்திருக்கிறான். யாரையும் நோகவில்லை. கடைசியில் அவளின் முகத்தைப் பார்க்கக் கூட உறவினர்கள் விடவில்லை. எல்லாம் முடிந்திருக்கிறது. நண்பர்கள் ஆறுதல் கூறியிருக்கின்றனர். அனைத்திற்கும் தலையாட்டி விட்டு வீட்டுக்குள் சென்றவுடன், மண்ணெண்ணெய் ஊற்றிக் கொண்டு அவள் போன இடத்துக்கே இவனும் போய்ச் சேர்ந்துவிட்டான். இதைக் கேட்டபோது எனக்கு உடம்பெல்லாம் அதிர்ந்துவிட்டது. அந்தப் பெண்ணின் மேல் இனம்புரியாத கோபம் வந்தது. எவ்வளவு நாட்கள் காத்திருந்து, காதலித்து, மணம் புரிந்து யாரோ எதுவோ சொல்லிவிட்டார்கள் என்பதற்காக உயிரை விட்டுவிட்டாளே பாவி! போனவள் அவனையும் அல்லவா அழைத்துச் சென்றுவிட்டாள்! இந்தக் கோழைகள் எதற்குக் காதலிக்க வேண்டும்? மனதில் உறுதியில்லாத போது எதற்கு ஆசை வைக்க வேண்டும்? நம்பிக்கை ஊட்ட வேண்டும்? உயிரிழக்க வேண்டும்? என்ன பேசி என்ன பயன்? போன உயிர் திரும்பவா வரப் போகிறது?



ஆனால், என் தோழி ஒருத்தியை நினைத்தால் இன்றைக்கும் எனக்குப் பெருமையாக இருக்கும். அவள் பெயர் ஆஷிமா. என்னுடன் படித்தவள். ஏழு வருடங்கள் தன் உறவுப் பையனைக் காதலித்தாள். இங்கும் இரண்டு வீடுகளுக்கும் இடையே கடும் பகை. பையன் வீட்டில் அவனுக்குப் பெண் தேட பேச்செழுந்தபோது என்னிடம் தைரியமாகச் சொன்னாள்... 'எப்படியும் அவரும் நானும்தான் சேருவோம். எங்களை யாராலும் பிரிக்க முடியாது!' அவள் சொன்னதுபோல்தான் நடந்தது. அவள் காதலன் இரண்டு வீட்டிலும் பெரும் முயற்சிக்குப் பின் பேசி, அவர்களின் மனதைக் கரைத்து, கொஞ்சம் கொஞ்சமாக இளக வைத்து, சம்மதம் பெற்று அவர்களின் திருமணம், இரு வீட்டார் சம்மதத்துடன் விமரிசையாக நடந்தது. இன்றைக்கு அவர்களுக்கு முத்து முத்தாய் இரு குழந்தைகள். என்னைப் பொறுத்தவரை அவர்களை இணைத்தது காதலின் உறுதிதான். உறுதி என்றால் தைரியம். தைரியம் என்றால் நம்பிக்கை. 'நம்ம காதல் அவ்ளோதான்' என்று வீழ்ந்துபோகாத அவர்களின் நேசத்துக்கு சல்யூட். இப்போதும் ஆஷிமாவை பார்க்கும்போதெல்லாம் காதல் பேசித் தீர்ப்பேன். 'நீ எப்படி மாட்டிக்கப் போற?' என்று கலாய்ப்பாள். 'நான்தான் தினம் ஒருத்தரை லவ் பண்றேனே... சினிமா ஷூட்டிங்ல' என்பேன். 'நெஜத்துலடி?' என்பாள்.



• ஸ்ரீகாந்துடன்...

சிரித்துக்கொள்வேன்.

'சிரிப்பின் அர்த்தம் ஸ்ரீகாந்த் தானே?' என்று உங்களில் பலருக்கு இதயம் துடிக்கும்! இல்லையென்று சொன்னாலும் நீங்கள் நம்பப் போவதில்லை. அதற்காக 'ஆமாம்' என்று சொல்லி இல்லாத ஒன்றை ஒப்புக்கொள்வதில் எனக்கு விருப்பமில்லை. அவருடன் மூன்று நான்கு படங்கள் ஒன்றாக இணைந்து பணிபுரிந்திருக்கிறேன். நல்ல ஆர்ட்டிஸ்ட். மிக மிக ஃப்ரெண்ட்லியாகப் பழகக் கூடியவர். மிகவும் கஷ்டப்பட்டு முன்னுக்கு வந்தவர். அவரின் நடிப்பு மிகப் பிடிக்கும். குறிப்பாக திரைக்குப் பின் நடிக்காத அந்த இயல்பு பிடிக்கும். அதற்காக அதனைக் காதல் என்று முடிவுகட்டி விடுவதா? சிரிப்புதான் வருகிறது. 'ஸ்ரீகாந்த் என் நல்ல நண்பர்' என்று கரடியாய்க் கத்தினாலும் யாருக்கும் புரிய மாட்டேன் என்கிறது. பத்திரிகைகளின் இடைவிடாத கிசுகிசுக்களால் சம்பந்தப்பட்ட மனங்கள் எவ்வாறு பாதிக்கப்படும் என்பதை ஏன் யாரும் உணருவதே இல்லை? ஸ்ரீகாந்துக்குக் குடும்பம் இருக்கிறது. அப்பா இருக்கிறார், அம்மா இருக்கிறார்... உறவுகள் இருக்கின்றன. எனக்கும் அப்படித்தான். இருந்தால் அறிவித்துவிட்டுப் போகிறோம். இல்லாததை நீங்கள் எப்படி அறிவிக்கலாம்? ஒருமுறை மறுக்கலாம், இருமுறை மறுக்கலாம்... இதே வேலையாய் செய்து கொண்டிருந்தால் அப்புறம் நடிப்பை விட்டுவிட வேண்டியதுதான்.

அதற்காக எனக்கு காதல் பிடிக்காது என்பதில்லை. காதல் வராது என்பதில்லை. யாருக்குத் தெரியும், நாளையே என்னைப் பார்த்து அது கண் சிமிட்டலாம், கட்டியணைக்கலாம், முத்தமிடலாம், மோகம் வளர்க்கலாம். நான் தயாராகத்தான் இருக்கிறேன். அந்த உணர்வுதான் இன்னும் வருவதாயில்லை. தினமும் ஒருமுறை தூக்கத்தில் கனவு காண்கிறேன். அதில் கடற்கரையோரம் ஏங்கிக் கிடக்கிறேன் காதலுக்காக. ஒரு குதிரை என்னை நோக்கி வருகிறது. அதில் ஒரு ராஜகுமாரன். எனக்குப் பிடித்த உடையில், என்னை வசீகரிக்கும் அழகில், என் இளமை பூக்கும் கம்பீரத்தில்... என்னை அள்ள வருகிறான். அவன் முகம் தேடி அலைகிறேன். அது மட்டும் இருட்டாக இருக்கிறது. முகம் தெரியாத அந்த மன்மதனுடன்தான் தினமும் காதலித்துக் கொண்டிருக்கிறேன். யார் அந்த முகத்துக்காரன் என்பது இன்னமும் எனக்குத் தெரியவில்லை. காலம் அவனை எனக்கு அடையாளம் காட்டும் தினத்துக்காக நிமிடந்தோறும் தவமிருக்கிறேன்... யார் கண்டது... உங்களுக்கு அதிர்ஷ்டமிருந்தால் அது நீங்களாகவும் இருக்கலாம்!

சந்திப்பு: **மு.மாறன்**

படங்கள்: **ஸ்ரீஹரி**

## மருத்துவம்

● என் மகனுக்கு இரண்டரை வயது. ஆனாலும் பேசத் தொடங்கவில்லை. மிகவும் கவலையாக இருக்கிறது. உடனடியாக மருத்துவ சிகிச்சை ஏதாவது பெற வேண்டுமா?

- எஸ்.சுபா, கன்னிவாடி

டாக்டர் ஜெயந்தி விஸ்வனாதன், குழந்தைநல மருத்துவர் :

உங்கள் மகனுக்கு காதுகள் நன்றாகக் கேட்கின்றன இல்லையா? இல்லை என்றாலோ, சந்தேகமாக இருக்கிறது என்றாலோ டாக்டரை அணுகுங்கள். மற்றபடி பிறந்ததும் குழந்தை அழவில்லை என்றாலோ, மெதுவாகவே நடக்கத் தொடங்கினான் என்றாலோ, பேச்சு கொஞ்சம் தாமதமாகவே வருவதற்கு வாய்ப்புண்டு. முடிந்தவரை குழந்தையிடம் ஒரே மொழியில் பேச வேண்டும். அப்போதுதான் குழந்தையும் சீக்கிரம் பேசத் தொடங்கும். "உட்காரு, சிட் டௌன்" என்பது போல் பேசினால், குழந்தைக்குக் குழப்பம் ஏற்பட்டு, பேசுவது தாமதம் ஆகலாம். பொதுவாகவே முதல் குழந்தை சற்றுத் தாமதமாகப் பேச வாய்ப்புண்டு. அடுத்துப் பிறக்கும் குழந்தைகள் தனது குட்டி சீனியர்களோடு மனம் ஒன்றிப் பழகுவதால், சீக்கிரமே பேச்சு வந்துவிடும். பொதுவாக இரண்டு வயதிற்குள்ளேயே குழந்தை "ம்மா", "தண்ணி" என்பது போன்ற சிறுசிறு வார்த்தைகளைக் கூறும். அதே சமயம் இரண்டு வயதுக்குள் பேசத் தொடங்கவில்லை என்றால், ஏதோ விபரீதம் என்று எண்ணிக்கொள்ள வேண்டியதில்லை. இப்போதெல்லாம் நிறைய பெற்றோர்கள் தங்கள் வேலை பளு காரணமாக குழந்தைகளிடம் அதிக நேரம் செலவழிப்பதில்லை. தினமும் அவர்களோடு தொடர்ந்து கொஞ்ச நேரம் பேச வேண்டும். அப்போது சீக்கிரமே பேச வாய்ப்பு உண்டு.

● எனக்கு வயது 55. என் மாமியாரால் எனக்கு எந்தப் பிரச்னையும் இல்லை. என் கணவர்தான் அவருடைய ஒரே மகன். மாமியாரைப் பார்க்கும்போதெல்லாம் எனக்கு தலைவலி வருகிறது. 'இது தப்பு. சின்ன வயதில் என்னை அவர் படுத்தி இருக்கலாம். ஆனால் இப்போது அப்படி எதுவுமில்லாதபோது அவரிடம் கோபம் வருவது நியாயமில்லை' என்று புரிகிறது என்றாலும், தலைவலியைத் தவிர்க்க முடிவதில்லை. ஒரு தீர்வு கூறுங்களேன்.

- கே.எஸ்.கே., கோவை

### "மாமியாரைப் பார்க்கும்போதெல்லாம் தலைவலி வருகிறது!"

டாக்டர் ஜெயந்தினி, மனநல மருத்துவர் :

இதேபோன்ற ஒரு பிரச்னையுடன் ஒரு பெண்மணி என்னிடம் ஆலோசனைக்கு வந்திருந்தார். கல்யாணம் ஆன புதிதில் தனது வார்த்தைகளால் அவர் மாமியார் நிறைய புண்படுத்தியிருந்தார். கணவரும் அப்போது மனைவிக்கு ஆதரவாக இல்லை. பிறந்த வீட்டிலோ 'நீதான் அவர்களுடன் அனுசரித்துப் போக வேண்டும்' என்று கூறிவிட்டார்கள். தன் மனக்குறையை யாரிடமும் கூற முடியாமல், அழுது அழுது தலைவலியை வரவழைத்துக் கொள்வது அவளுக்குப் பழக்கமாகிவிட்டது. எனவே

# தவிர்க்க முடியாது



# தலைவலி!

மாமியாரைப் பார்க்கும்போதெல்லாம் பழைய நினைவுகள் அவள் அடி மனதில் எழுந்தன. அதனால் மாமியாரின் முகத்தைப் பார்க்கவே அவருக்குப் பிடிக்கவில்லை. கணவரிடம் சொன்னாலோ 'எப்பவோ நடந்து முடிஞ்ச விஷயத்துக்கு இப்போ எதுக்கு அலட்டிக்கறே?'' என்றுதான் கூறுவார் என்ற கவலை. சரி இதற்கு என்னதான் தீர்வு என்கிறீர்களா? யாரிடமாவது உங்கள் மன எண்ணங்களைக் கொட்டித்தீருங்கள். பிறகு உங்கள் அணுகு முறையில் மாறுதல் மெல்ல மெல்ல தானாக வந்து சேரும்.

- மாதவிலக்கு நிற்கும் கட்டத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறேன். மெனோபாஸுக்குப் பிறகு உடலில் உள்ள ஈஸ்ட்ரோஜன் ஹார்மோன் சுரப்பது குறைந்துவிடும் என்றும், செயற்கை முறையில் அந்த ஹார்மோனை ஊசிமருந்தாகச் செலுத்திக்கொள்ள வேண்டும் என்றும் சிலர் கூறுகிறார்கள். உண்மையா?

  - சிவகாமி, மதுரை

**டாக்டர் அமுதா ஹரி, மகப்பேறு மருத்துவர் :**

மெனோபாஸுக்குப் பிறகு ஈஸ்ட்ரோஜன் ஹார்மோன் குறைபாடு ஏற்படும் என்பது உண்மைதான். என்றாலும் மருந்தாக அதை உடலில் செலுத்திக் கொள்ளத் தேவையில்லை. இயற்கையாகவே அந்தச் சத்தைக் கிடைக்கச் செய்யலாம். அதாவது ஈஸ்ட்ரோஜன் அதிகமுள்ள உணவு வகைகளை அதிகமாகச் சேர்த்துக் கொள்ளலாம். வெள்ளை கொண்டைக் கடலை, சோயா, காய்கறிகள், கீரை வகைகள் ஆகியவற்றில் இந்த ஹார்மோன் சத்து அதிகமுண்டு.

- என் கூந்தலில் நிறைய வெடிப்பு. இரண்டு இரண்டாகப் பிளவுபட்டுக் காணப்படுகிறது. என்ன செய்யலாம்?

  - ஆர்.ஸ்வேதா, சென்னை

**எம்.ஹசீனா சையத், ஆயுர்வேத அழகுக்கலை நிபுணர் :**

நிறைய நேரம் வெயிலில் அலைவதாலும், கூந்தல் ஈரமாக இருக்கும்போதே வாரிக்கொள்வதாலும் இப்படி நேர வாய்ப்புண்டு. குளிப்பதற்கு முன் தலையில் எண்ணெய் தேய்த்து மசாஜ் செய்து கொள்ளுங்கள். தலைமுடி ஈரமாக இருக்கும் போது வாரிக் கொள்ளாதீர்கள். பிளவுபட்ட கூந்தல் நுனியை ட்ரிம் செய்து கொள்ளுங்கள்.

- ஜி.எஸ்.எஸ்.

பாலி க்ளினிக்

மினி கதை

# விலை

வயலை சுற்றிப் பார்க்கக் கிளம்பினார் நாராயணசாமி. கூடவே அவரது நண்பர் மாணிக்கம்.

“இந்த வயல்களைப் பார்த்தீங்களா மாணிக்கம்...? போன வருஷம் வரை நெல்லும், கரும்பும், வாழையுமா முப்போகம் வெளைஞ்ச பூமி இது... இப்போ, வீடு கட்ட ஃப்ளாட் போட்டு வித்தாச்சு... நினைச்சா எவ்வளவு கஷ்டமா இருக்கு தெரியுமா...?”

போன வருடம் வரை வயலாக இருந்து இப்போது ஃப்ளாட்டாக மாறிவிட்ட தனது நிலத்துக்கு பக்கத்து நிலத்தைப் பார்த்து சொன்னார்.

“மழை பொய்ச்சுப் போச்சு... விவசாயத்துல முன்ன மாதிரி இப்போ வருமானம் வர்றதில்லைதான்... அதுக்காக ஒவ்வொரு விளைநிலத்தையும் ஃப்ளாட்டா மாத்திட்டா எப்படி...? ஒரு பக்கம் மக்கள் தொகை அதிகமாயிட்டே போகுது.. அதுக்குத் தகுந்த மாதிரி விளைச்சலை அதிகப்படுத்த வேண்டாமா...? இப்படியே போனா அடுத்த தலைமுறை பஞ்சத்துலதான் தவிக்கப் போகுது...”

“நீங்க சொல்றது சரிதான் அண்ணாச்சி...” என்றார் மாணிக்கம்.

இருவரும் இப்போது நாராயணசாமிக்குச் சொந்தமான வயலில் நடந்து கொண்டிருந்தனர். ஒரே சதுரமாக ஐந்து ஏக்கர் பூமி நாராயணசாமிக்குச் சொந்தம். ஒரு பக்கம் கரும்பு போட்டிருந்தார். இன்னொரு பக்கம் வாழை குலை தள்ளியிருந்தது. மறுபக்கம் நெல் கதிர்கள் விளைந்து சாய்ந்திருந்தன. கிணற்றிலிருந்து தண்ணீர் வயலுக்குப் பாய்ந்து கொண்டிருந்தது.



“உங்களை நினைச்சா சந்தோஷமா இருக்கு அண்ணாச்சி... உங்க நிலத்தை சுத்தியுள்ளவங்க எல்லாரும் அவங்களோட நிலத்தை ஃப்ளாட் போடக் குடுத்துட்டாங்க... ஆனா, நீங்க இன்னும் வித்துடாம விவசாயம் பண்ணிக்கிட்டிருக்கீங்களே...”

“எப்படி விக்க முடியும் மாணிக்கம்...? என்னோட நிலத்தைப் பாத்தீங்களே... எவ்வளவு அருமையான இடம் இது...? என் கிணத்து தண்ணி டேஸ்ட் இளநி மாதிரி இருக்கும்... வருஷம் பூரா கிணத்துல தண்ணி வத்தாம இருக்கும்... இப்போ ஃப்ளாட் போட வித்துட்டு இருக்கற நிலங்கள்ல விவசாயம் நடந்தப்போ எல்லாத்துக்கும் என் கிணத்துல இருந்துதான் தண்ணி பாயும்... அப்படிப்பட்ட என் நிலத்துக்கும், மத்த நிலங்களுக்கு தர்ற விலைதான் தருவேன்னு சொன்னா எப்படி? நான் எதிர்பார்த்த விலை கிடைக்கலை... அதான் இன்னும் விக்காம வச்சிருக்கேன்...” என்றார் நாராயணசாமி.

ஆனந்தன்

CKM
DIVINE HERBAL CENTRE

# மார்பக புற்றுநோய் பரவாமல் தடுக்கவும், கட்டுப்படுத்தவும், வராமல் பாதுகாக்கவும் தேவையான தெய்வீக மூலிகை மற்றும் இயற்கை சிகிச்சை முறைகள்

## பத்தியம் கிடையாது. பக்க விளைவு கிடையாது

பெண்களுக்கு தோன்றும் புற்று நோய்களில் மார்பகபுற்றுநோய் இரண்டாம் இடத்தை வகிக்கின்றது. இது ஹார்மோன் குறைபாடு, வைரஸ் போன்ற நோய்க்கிருமி, பரம்பரை தன்மை, உணவு பழக்கம், வாழ்க்கைமுறை, சுற்று சூழல் மனநிலை பாதிப்பு போன்ற ஏதேனும் ஓரிரு காரணங்களால் உடலில் நச்சுக்கள் அதிகமாகி புற்று நோயாக மாறிவிடுகின்றது. இவைகளை நாம் உட்கொள்ளும் உணவில் கசப்பு சுவையுள்ள காய்கள், கீரைகள், பழங்கள், நம் அருகில் உள்ள சிலவகையான கசப்பு சுவையுள்ள மூலிகைகள் உட்கொள்வதால் எல்லாவிதமான புற்று நோய்களையும் குணமாக்கி கொள்ளலாம். வராமலும் தடுத்துக் கொள்ளலாம். கசப்பு சுவையானது நச்சுக்களை முறிப்பதிலும், நோய்க்கிருமிகளை அழிக்கும் தன்மை கொண்டது. சுமார் 40–வயதுக்கு மேற்பட்ட பெண்களுக்குத் தான் மார்பக புற்று நோய் வருகின்றது. இதற்கு ரேடியோ தெரபி, கீமோ தெரபி, அறுவை சிகிச்சை போன்ற முறையில் சிகிச்சைகள் தரப்படுகின்றது. இவைகளில் பக்கவிளைவுகள் உண்டு. முழுமையான நிவாரணத்திற்கு உத்திரவாதமில்லை. எனவே எல்லா பெண்களும் மார்பக புற்றுநோய் பற்றியும் அவைகளை குணப்படுத்தும் மூலிகை, உணவு முறைகளை தெரிந்துகொள்வது அவசியம்.

**மார்பக புற்றுநோய் வருவதற்கான காரணம் :** • குறிப்பிட்ட வயதிற்கு முன்பே மாதவிடாய் ஏற்படுவது. • 45 to 50 வயதிற்கு பிறகு மாதவிடாய் வருவது நின்று விடும். 45– வயதிற்கு பிறகும் மாதவிடாய் ஏற்பட்டால் மார்பகபுற்று நோய் வரலாம். குழந்தைக்கு தாய்ப்பால் கொடுக்காமல் இருப்பது, காலதாமதமாக முதல் குழந்தை பெறுவது, குழந்தையில்லாதவர்கள், மார்பகபுற்று நோய் ஏற்கனவே இருக்கும் குடும்பத்தில் பிறந்தோர் ஆகியோருக்கு இந்நோய் வரும் அபாயம் அதிகம்.

**மார்பக புற்று நோயின் அறிகுறிகள் :** மாதவிடாய் ஏற்படுவதற்கு ஒரு வாரம் முன்போ (அ) மாதவிடாய் காலத்திலோ அல்லாமல் மற்ற நாட்களில் மார்பகத்தில் தனிதனியாக, வலியற்ற சிறிய அல்லது பெரிய கட்டிகள் தோன்றுதல், மார்பகங்களின் அளவில் மாற்றம், மார்பக காம்புகள் உள்ளடித்து இருத்தல், மார்பக காம்பில் இருந்து இரத்தம் வடிதல், மார்பக காம்பைச்சுற்றி அரிப்பு மார்பகம் அசைக்க முடியாத உறுதியான நிலையில் காணப்படுதல் போன்றன மார்பக புற்று நோயின் அறிகுறிகள் ஆகும். மேலும் 40– வயதிற்கு மேல் உள்ளவர்கள் மார்பக சுய பரிசோதனை செய்தும் மேற்கூறிய அறிகுறிகள் உள்ளதா என்பதை தெரிந்துக்கொள்ளலாம்.

**மார்பக புற்றுநோயாளிகள் பின்பற்ற வேண்டிய உணவுமுறைகள்**

செயற்கையாகத் தயாரிக்கப்படும் உணவுகளும், சில உணவுத்தயாரிப்பு முறைகளும் புற்றுநோய்க்கு காரணமாகின்றன. எனவே நிறத்திற்காகவும், மணத்திற்காகவும், இனிப்புக்காகவும் சேர்க்கப்படும் செயற்கை வேதிப்பொருட்களை தவிர்த்து, புற்றுநோயை விரட்டியடிக்கின்ற பச்சையாக உட்கொள்ளும் பழங்கள், காய்களை அதிகம் உட்கொள்ள வேண்டும். எனவே காலை உணவாக தினம் இந்நோயாளிகள், பச்சையாக சாப்பிடும் பழங்கள், காய்கள், வெஜிடபிள் சாலட், பழச்சாறுகள் இளநீர், போன்றவைகளாக உட்கொள்ள வேண்டும். அந்தந்த காலங்களில் கிடைக்கும் பழங்கள், காய்கள், வெஜிடபிள் சாலட், பழச்சாறுகள், இளநீர், போன்றவைகளாக உட்கொள்ள வேண்டும். பகல் வேளை உணவை 50% சமைத்த உணவாகவும் 50% அளவு காய்கள், கீரைகள் இருக்கும் படியாக உள்ள உணவுகளை சாப்பிடவும் மாலையில் வெஜிடபிள் சூப், சத்துமாவு கஞ்சி, பட்டாணி சூப், கீரைகள் சூப்போன்றன சாப்பிடலாம். இரவு சமைத்த உணவாக வாரம் நான்கு நாட்களும், இயற்கை உணவை வாரம் மூன்று நாட்களும் சாப்பிடவும். இவ்வாறான உணவில் உடலுக்குத் தேவையான சரிவிகித உணவு கிடைக்கும் இதனால் நோய் விரைவில் குணமாகும்.

**ஒவ்வொரு மாதமும்**

| | |
|---|---|
| 2 | வேலூர் |
| 2 | காஞ்சிபுரம் |
| 4 | கடலூர் |
| 4 | விழுப்புரம் |
| 4 | திருவண்ணாமலை |
| 7,8 | மும்பை |
| 9 | பெங்களூர் |
| 12 | சேலம் |
| 12 | ஈரோடு |
| 12 | திருப்பூர் |
| 13 | கோவை |
| 13 | உடுமலைபேட்டை |
| 14 | மதுரை |
| 14 | திருநெல்வேலி |
| 15 | விருதுநகர் |
| 15 | தஞ்சாவூர் |
| 16 | திருச்சி |
| 16 | கரூர் |
| 20,21 | புது டெல்லி |

டாக்டர் C.K. மாணிக்கவாசகம் அவர்களால் 34வருட அனுபவ ஆராய்ச்சியில் எழுதப்பட்ட "எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்" என்ற நூலினை பதிவுத்தபாலில் பெற ரூ. 120/-ம், "என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்" என்ற புதிய நூலினை பதிவுத் தபாலில் பெற ரூ.120/- ம் தலைமை முகவரிக்கு M.O. அனுப்பவும். மேலும் விவரங்களுக்கு:

## CKM தெய்வீக மூலிகை மையம்

## CKM DIVINE HERBAL CENTRE

தலைமை முகவரி : P.B. NO. 30, 1,திருநாத முதலி நகர் (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர், வேலூர் dt. 635601
✆:04179–220468, 222768 செல் : 9842369696

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (பிரின்ஸ் மேனர் பக்கத்தில்) கெல்லீஸ், சென்னை – 600 010. ✆ : 044–26424285, 26427638. செல் : 9444001447

: T-4,3வது மாடி, பிளாட் –3, 5வது தெரு, ஸ்ரீ லட்சுமி ஹோம்ஸ், அண்ணா திருநகர், கோயம்பேடு, சென்னை– 107. ✆ : 044–55643347 செல் : 9282405758

டெல்லி கிளை : 6/34, W.E.A., Karolbagh, New Delhi - 5. ✆ 011-25736220 Cell : 9868026743

மேலே உள்ள முகவரிகளில் ஆலோசனை தினமும் நேரம் காலை 10.00–1.00 p.m. மாலை 5.00–7.00 P.M.

## விளையாட்டு

**இந்த வருட தொடக்கத்தில் புகழின் உச்சியிலிருந்த சானியா மிர்ஸா, அடுத்தடுத்து கலந்து கொண்ட பல போட்டிகளில் தோல்வி முகம் கண்டிருக்கிறார். இந்தியாவின் நம்பிக்கை நட்சத்திரம் சமீபகாலமாக ஒளியிழந்து போனதன் காரணமறிய விம்பிள்டனுக்காக லண்டன் சென்றிருந்த சானியா மிர்ஸாவைத் தொடர்பு கொண்டோம். மளமளவென பதில்களைக் கொட்டினார்.**



"மத்த கேம் மாதிரி டென்னிஸ் கிடையாது. வருஷம் முழுவதும் ஆடிக் கொண்டேயிருக்க வேண்டும். ஹைதராபாத்தில் வென்ற பிறகு கணுக்காலில் அதிகமாக காயம் ஏற்பட, நான் ஆறு வாரங்கள் டென்னிஸிலிருந்து தற்காலிக ஓய்வு பெற வேண்டியதா போச்சு. ஆளானப்பட்ட செரீனா வில்லியம்ஸ் கூட காயத்திலிருந்து மீண்டு வருகிற சமயத்தில் நிறைய தோற்றிருக்கிறார். நான் மட்டும் எம்மாத்திரம்?" என்று பெருமூச்சு விட்டவர், "ஆனால் மீடியாவும் ரசிகர்களும்தான் தோல்விகளைப் பெரிதுபடுத்துகிறார்கள். கடந்த ஐந்து வருடங்களாக உலகத்தின் டாப் 30 ரேங்கில் உள்ளவர்களிடம் தோற்றதுதான் பெரிய தவறு என்றால் அப்படியே இருந்துவிட்டுப் போகட்டும். காயத்திலிருந்து விடுபட்டு அதே திறனுடன் ஆடுவதென்பது சாதாரண விஷயமா? ஆனால் செரீனா வில்லியம்ஸ், ஷரபோவா, டேவன் போர்ட் ஆகியோரை விடவும் அதிகப்படியான எதிர்பார்ப்புகளையும் விமர்சனங்களையும் நான் எதிர்கொள்ள வேண்டியிருக்கிறது. ஏனெனில் இந்தியர்கள் எளிதில் உணர்ச்சிவசப் படுபவர்கள்" என்றார்.

எம். டீ.வி. நடத்திய 'யூத் ஐகான்' போட்டியில் உங்களை ஜெயித்த ஷாருக்கான் 'சானியா மிர்ஸா வர்த்தக விஷயங்களுக்காக கவனத்தைச் சிதறவிடக் கூடாது என்று கூறியிருக்கிறாரே' என்றதற்கு,

"முதலில் இந்த 'யூத் ஐகான்' மாதிரியான விருதுகளெல்லாம் ஒரு விளையாட்டு வீரருக்கு உபயோகமே கிடை



யாது. நாட்டுக்காக விளையாடி ஜெயிப்பதில் தான் எங்கள் கௌரவமும் பெருமையும் அடங்கியிருக்கிறது. ஷாருக்கானின் திறமையைக் கண்டு நானும் வியப்பதுண்டு. ஆனால் சர்வதேச அளவில் போட்டி போட்டு அதற்குண்டான பணத் தேவையைப் பெற ஒரு டென்னிஸ் ப்ளேயர் எவ்வாறெல்லாம் போராட வேண்டியிருக்கிறது என்பதைப் பற்றி அவருக்கு என்ன தெரியும்! போட்டிகளில் கலந்து கொள்வது, தங்குவது, விமானச் செலவு, ஃபாரின் கோச்சுகளுக்கான கட்டணம் என வருடத்துக்குக் குறையாமல் இரண்டு கோடி ரூபாய் தேவைப்படுகிறது. என்னைப் போன்றவர்களுக்குப் போட்டி யில் கிடைக்கும் பரிசுத் தொகை மிகக் குறைவு என்பதால் விளம்பரங்களில் நடித்துத்தான் என் பணத்தேவையைச் சரிக்கட்ட முடிகிறது. இந் நிலையிலும் வருடத்துக்கு இருபத்தைந்து நாட் களுக்கு மேல் விளம் பரப் படப்பிடிப்பு களில் என்னை ஈடு படுத்திக் கொள்ள மாட் டேன். அதேபோல் என்னதான் விளம்பரங் களில் நடித்தாலும் பிகினி உடை போட்டு நடிக்க மாட்டேன். என் மதமும் அதன் உணர்வுகளும் எனக்கு முக்கியம். அஞ்சு ஜார்ஜை விட எனக்கு அதிக விளம்பரங்கள் கிடைப்பதென்றால் நான் ரொம்ப 'லக்கி' என்றுதான் சொல்ல வேண்டும்'' என்று நீண்ட பதிலளித்தவருக்கு மீடியா மீது கடுங்கோபம்.

# “ஷாருக்கானுக்கு என்ன தெரியும்!”

“மீடியா டென்னிஸை கவர்ச்சிகர விளையாட்டாக நினைக்கிறது. குறிப்பாக மூன்றாம்தர மற்றும் பளபளப்பான பத்திரிகைகளுக்கு சர்வதேச டென்னிஸைப் பற்றி எதுவும் தெரிவதில்லை. ரத்தத்தையும் வியர்வையை யும் சிந்தித்தான் நான் நாட்டுக்காக ஆடிக் கொண்டிருக்கிறேன்'' என்று எளிதில் உணர்ச்சிவசப்பட்டவர், பிறகு அசாருதீன் பற்றிக் கூற ஆரம்பித்தார்.

“அசார் என் ஃபிட்னஸ் பற்றி மிகவும் அக்கறை எடுத்துக் கொண்டு ஆலோசனைகள் கூறுவார். நான் நிறைய சாப்பிடக்கூடாது என்று அறிவுறுத்துவார். கடந்த ஒரு வாரத்தில் என்னென்ன சாப்பிட்டேன் என்று அவருக்கு நான் ஒப்பித்தாக வேண்டும். இதனாலேயே பிரியாணி சாப்பிடுவதை குறைத்துக் கொண்டுள்ளேன்'' என்று சிரிக்கும் சானியாவுக்கு எங்கு சென்றாலும் ரசிகர் கள் தொந்தரவாம்.

“இதனால் எனக்கு ஆந்திர அரசாங்கம் தற்பொழுது பாதுகாப்பு கொடுத்துள்ளது. அதே சமயம் நான் மூக்குத்தி போட்டிருப்பதை ஃபேஷனாக நினைத்து இளைஞர்கள் பின்பற்றுவதும் மகிழ்ச்சியாக இருக் கிறது'' என்று உற்சாகமாய் கூறி முடித்தார்.

- ச.ந.கண்ணன்



சானியா

## சிரிப்பு



''ஆசிரியர் அய்யாசாமியை வகுப்பறையில பாடம் நடத்திட்டிருந்தப்ப ஏன் கைது பண்ணினீங்க?''

''ஏதாவது செக்ஷன்ல கைது பண்ணச் சொல்லி அமைச்சரோட உத்தரவு; அதான் 10-ம் வகுப்பு 'B' செக்ஷன்ல இருந்தப்ப கைது பண்ணினேன்!''

- சீர்காழி வி.ரேவதி



''அமைச்சரே... என்ன திடீரென்று கஜானா காலியாக உள்ளதென்று கூறுகிறீர்...?''

''நேற்று தங்கள் பையனுக்கு ஸ்கூல் அட்மிஷன் ஃபீஸ் கட்டியதை மறந்துவிட்டீரா மன்னா!''

- வே. ஆறுமுகம்

# ''ஜனாதிபதிக்கு



''எங்க டாக்டர் இப்போ செய்ய ஆரம்பிக்கிற இந்த ஆபரேஷன் மாலைதான் முடியும்....''

''சரியா சொல்லுங்க சிஸ்டர்... மாலை முடியுமா, இல்லை மாலைல முடியுமா...?''

- கே. ஆனந்தன்



''சமீபத்துல வந்த படங்களில் நமது ஜனாதிபதிக்கு பிடிச்ச படம் எதுவா இருக்கும் சொல்லு?''

''கனா கண்டேன்!''

- சம்பத்குமாரி



''என் மாமா கங்குலி மாதிரி...''

''கிரிக்கெட் விளையாடுவாரா...?''

''ஊஹும்... எங்காவது ஊருக்குப் போனா தங்க மாட்டார்... உடனே கிளம்பிடுவார்...''

- கே. ஆனந்தன்

# பிடிச்ச படம்!”

''என்னங்க இது... மொய் கவர்ல நூறு ரூபாய்னு எழுதியிருக்கு.... ஆனா ஐம்பது ரூபாய்தான் உள்ளே இருக்கு. இதை யார் கொடுத்தது?''

''வேறு யாரு... நம்ம ரேஷன் கடைக்காரர்தான்!''

- என். உஷாதேவி



ஹா...ஹா...ஹா...

## உலகம் இவ்வளவுதான்!

அவர் ரஷ்யாவின் உக்ரைனில் இருக்கிறார். பெயர் யெவ்டோகியா. இதுவரை 114 முறை மெழுகுவர்த்திகளை ஊதி ஊதி அணைத்து தன் பிறந்தநாளைக் கொண்டாடியிருக்கிறார். இந்த பூமியிலேயே மிக அதிக வயதான பெண்மணி இவர்தான்.

யெவ்டோகியா தன் வாழ்நாளில் இரண்டு உலகப் போரையும், ஒரு உள்நாட்டு போரையும் பார்த்திருக்கிறார். தன் மகன், மகள், பேரக் குழந்தைகள், கொள்ளு குழந்தைகள், ஜொள்ளு குழந்தைகள், அனைவரோடும் ஓடிப்பிடித்து விளையாடியிருக்கிறார். 'ஒரு ஊர்ல ஒரு ராட்சசன் இருந்தான்' என்று வரிசையாக எல்லாக் குழந்தைகளையும் மடியில் கிடத்தி நிறைய கதைகளைச் சலிப்பில்லாமல் கொட்டாவி விட்டபடி சொல்லியிருக்கிறார், இன்னமும் சொல்லிக் கொண்டிருக்கிறார்.

ஆபீஸ் போகும்பொழுது டிபன் பாக்ஸில் லெமன் ரைஸோடு சேர்த்து ஆஸ்ப்ரினும் பாரசிட்டமாலும் தனித்தனியாக பொட்டலம் கட்டி எடுத்துப் போகும் இன்றைய 'ஆரோக்கியமான' இளைஞர்களுக்கும் இளைஞிகளுக்கும் இவரைப் பார்த்தால் ஆச்சரியமும் பொறாமையும் பொத்துக்கொண்டு வருகிறது. கை வலி, கால் வலி, தலை வலி என்று இதுவரை எந்த மருத்துவமனையிலும் இவர் ஒதுங்கியது கிடையாதாம். ஊசி, மருந்து மாத்திரைகளை எப்பொழுதோ சிறுவயதில், அதுவும் தொலைவிலிருந்து பார்த்ததோடு சரி. "ஆஸ்பத்திரியா? அப்படின்னா என்ன?" என்கிறார் தலையைத் தடவியபடி.

இவை போதாதென்று உக்ரைன் நாட்டுச் சரக்கை 'பிரிக்க வேண்டாம். அப்படியே சாப்பிடுவேன்' என்று சொல்லி மெய்யாகவே சப்புக் கொட்டிச் சாப்பிடுகிறார். இத்தனைக்கும் கொரில்கா எனும் இந்த வகை சாராயம், மிக அதிகமான போதையைத் தருவது. மொடாக்குடியர்கள்கூட 'வாணாம் சாமி ஆளை வுட்ரு' என்று பெரிய கும்பிடு போட்டுவிட்டு நகர்ந்து விடுமளவிற்குச் 'சக்தி' வாய்ந்தது. 'இதெல்லாம் கொஞ்சம் ஓவரா தெரியலையா பாட்டி?' என்று கேட்டால் "எப்பவாவது தான் பேராண்டி, அதுவும் சும்மா லைட்டாதான்" என்கிறார், என்ன சொல்ல?

* இளமை ஊஞ்சலாடுகிறது!



# டைட்டானிக்

யெவ்டோகியாவிற்கு 40 வயது ஆன பொழுது இவருடைய நண்பர்கள், "என்ன மிஞ்சி மிஞ்சிப் போனா உனக்கு 20 வயசு இருக்குமா?" என்று கேட்பார்களாம். இவரும் தலையை ஆட்டிச் சிரிப்பாராம். தனது 100வது வயதைத் தொட்டபொழுது 70 வயது பெண்மணி போல் தோற்றமளித்தாராம்.

இன்றைக்கும் தோட்டத்தில் கீரை, காய்



• கின்னஸ் காதல்!

கறிகளைப் பயிரிட்டுக் கொண்டு, தன்னைக் காண வரும் பார்வையாளர்களுக்கு ஹாய் சொல்லிக்கொண்டு, தனதுஅடுத்த பிறந்தநாளுக்காக மெழுகு வர்த்திகளைச் சேகரித்துக்கொண்டு, ஈஸிசேரில் சாய்ந்துவிடாமல் சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருக்கிறார் இந்த அதிசய கின்னஸ் பாட்டி.

# பாட்டி!

இன்னொரு ரஷ்ய செய்தி. இதுவும் கின்னஸ் சாதனைதான். எகாடெரின்பர்க் எனும் பகுதியில் அமைந்திருக்கும் சல்யூட் தியேட்டரின் பெயர் கின்னஸில் பதிவாகியிருக்கிறது. சல்யூட் தியேட்டர் சாதனை என்ன தெரியுமா?

கிட்டத்தட்ட எட்டு வருடங்களாக தினசரி அனைத்துக் காட்சிகளும் இங்கு 'டைட்டானிக்'தான் ஓடிக் கொண்டிருக்கிறது! "நாங்க என்னப்பா செய்யறது? போதும் பழசாயிடுச்சி! படத்தை எடுத்திடலாம்னு பார்த்தா தினமும் ஹவுஸ்ஃபுல்லா ஓடிக்கிட்டிருக்கு. புதுசு புதுசா ஆளுங்க வந்துக்கிட்டேயிருக்காங்க. ஏற்கெனவே பார்த்தவங்களும் கம்மாயில்லாம மறுபடியும் மறுபடியும் வந்து உட்கார்ந்திடறாங்க" என்கிறார் தியேட்டர் உரிமையாளர். கிட்டத்தட்ட புலம்பாத குறைதான்!

வயது வித்தியாசமின்றி ரஷ்யர்கள் அனைவரும் டைட்டானிக் கனவுகளில் தான் மிதந்து கொண்டிருக்கிறார்கள். ஒவ்வொரு முறை டைட்டானிக் உடைந்து கவிழும்பொழுதும் ஏதோ கப்பலே கவிழ்ந்து விட்டதைப் போல (அட சரியான பழமொழிதான்) ரஷ்யர்கள் ஒப்பாரி வைத்து அழுது கொட்டிவிடுகிறார்களாம். தன் காதலனைத் தொலைத்த கேட் வின்ஸ்லெட்கூட படத்தில் அந்த அளவுக்கு அழுதிருக்க மாட்டார். வயதான பெண்மணிகள் அருகிலிருப்பவரைக் கட்டிப்பிடித்து அழுகிறார்களாம். காதலர்கள் குமுறிக் குமுறி அழுகிறார்களாம். குழந்தைகள் தேம்பித் தேம்பி அழுகிறார்களாம். எட்டு வருடங்களாக சல்யூட்டில் இதுதான் நடந்து கொண்டிருக்கிறது.

பொறுத்து பொறுத்துப் பார்த்த கின்னஸ்காரர்கள் "இந்தா சாமி கின்னஸ் விருது" என்று சொல்லி ஓடோடி வந்து சல்யூட்டிற்கு ஒரு சல்யூட் அடித்துவிட்டுப் போய் விட்டார்களாம்!

- மருதன்

ரஷ்யா

## எக்குத்தப்பு விசிட்







இன்னிய தேதிக்கு இன்ஜின் ஜூட்டா ஓடிக்கிட்டு இருக்குற வண்டி... ஸாரி... கட்சி எது தெரியுமா? சாமி சத்தியமா பி.ஜே.பி. தான். எல்லாம் நம்ம ஜின்னா புண்ணியத்துலதான்னு தொண்டர்கள் பேசிக்கிட்டு இருக்காங்க. எங்கன்னு கேட்கறீங்களா? அதாங்க, தி.நகர் வைத்தியராம் தெருவுல இருக்குற கட்சி ஆபீசுலதான். 'என்னப்பா, நீங்க ஜின்னாங்கறீங்க. வைத்தியராம் தெருங்கறீங்க. அந்தத் தெருவுல இருக்கிறது மார்க்ஸிஸ்ட் ஆபீசாச்சே'ன்னு நீங்க சொல்றது காதுல விழுது. நாங்க சொல்ல வர்றது அந்தத் தெருவுலயே இருக்குற பி.ஜே.பி. ஆபீசை.

கட்சி ஆபீசுக்குள்ள நுழையறதுக்குள்ளயே நம்ம கண்ணுல சிக்குனது, வாசல்ல வச்சிருந்த ரெண்டு கட்-அவுட்டுங்கதான். ரெண்டுமே இல.கணேசனுக்குத்தான் வச்சிருந்தாங்க. திராவிடக் கட்சிங்கதான் இப்படி கட்-அவுட்லாம் வச்சி மிரட்டுவாங்க. இப்போ இவங்களும் கௌம்பிட்டாங்கபோல. சரி... எப்படியோ முன்னேறுனா சரின்னு மனசுல நினைக்கறதுக்குள்ள, சர்...புர்னு ரெண்டு டாட்டா சுமோ... நாலஞ்சு கட்சிக்காரங்க அதுல இருந்து இறங்க, கட்சி ஆபீசு வாசல்ல இருந்த செக்யூரிட்டிகிட்ட பேசிட்டு, திடீர்னு ஆபீசுக்குள்ள போகாம வெளியிலயே நின்னுட்டாங்க. 'ஆஹா.. அன்னு... அன்னு... மேட்டரை அன்னு'ன்னு பாடிக்கிட்டே (மனசுக்குள்ளதான்) பக்கத்துல போயி நைஸா நின்னோம்.

"ஏம்பா... ஏற்கெனவே பார்ட்டி, 'வரவர மாமியார், கழுதை மாதிரி ஆனான்'னு போயிட்டிருக்கு. இந்த லட்சணத்துல அத்வானியும், சுஷ்மாம்மாவும் தனித்துப் போட்டி... தனித்துப் போட்டின்னு உதார் விடறாங்க, நாம என்னவோ இப்பத்தான் இங்க ஆட்சியில இருந்து இறங்கின மாதிரி. இதுல்லாம் எங்க போய் முடியுமோ தெரியல"ன்னு ஒரு தொண்டர் உஷ்ணப்பட, அவரைத் தேத்துற மாதிரி பேசுன இன்னொரு தொண்டர், "விடுப்பா... இப்ப வெறைப்பாத்தான் பேசிக்கிட்டு திரிஞ்சாகணும். இல்லன்னா நம்மளை யாரு மதிப்



# நெனப்புத்தான் பொழப்பைக் கெடுக்குது!

ஒற்றன்

பாங்க. கடைசி நேரத்துல யாராவது ஒருத்தரு டெல்லியில இருந்து வந்து அம்மாவை கரெக்ட் பண்ணி நம்மளையும் கரெக்ட் பண்ணிடுவாங்க"ன்னு அப்பாவியா முகத்தை வைச்சுக்கிட்டு சொல்ல, நமக்கு 'நெனப்புத்தான் பொழப்பைக் கெடுக்குமாம்'ங்கற பழமொழிதான் சட்டுனு ஞாபகத்துக்கு வந்துச்சு.

**வெ**யில் மண்டையைப் பிளக்க, மெதுவா உள்ள போயி ஃபேன் காத்து வாங்கிட்டே எதுனா மேட்டர் தேத்துலாம்னு ஆபீசுக்குள்ள நுழைஞ்சோம். கொஞ்ச நேரத்துல நம்ம பக்கத்துல நாலு பேரு வந்து உட்கார்ந்தாங்க... அவங்க பேசிக்கிட்டதை வச்சிப் பார்த்தா, அவங்கள்லாம் திருநாவுக்கரசரோட ஆளுங்க மாதிரி தெரிஞ்சுது. நைஸா அவங்ககிட்ட போயி, "ஏண்ணே.. கட்சி ஆபீசு பக்கம் வந்திருக்கீங்க. அண்ணன் நம்மளை எல்லாம் அண்ணா நகர் வீட்லதானே வச்சிப் பார்ப்பாரு"ன்னு ஒரு பிட்டைப் போட, "நீங்க சொல்றது கரெக்டுதான் தம்பி. அண்ணன் சாயந்தரம் அஞ்சரைக்குத்தான் வீட்டுப் பக்கம் வரச் சொன்னாரு. சரி.. அதுக்குள்ள கட்சி ஆபீசுக்கு ஒரு எட்டு போயிட்டு வந்துறலாம்னு வந்தேன்"னார் ஒரு அடிப்பொடி.

"சரிண்ணே... தி.மு.க., அ.தி.மு.க. மாதிரி நம்ம கட்சியில மாநாடு - பேரணி எதுவுமே போட மாட்றோமே... அப்புறம் எப்படி? கட்சி வளரும்"னு வாழைப்பழத்துல நைசா ஊசி இறக்கினோம்.

"பொறுமை வேணும் தம்பி. எப்படியும் இன்னும் கொஞ்ச நாள்ல நம்ம தலைவரையே கட்சிக்கும் தலைவராக்கிடுவாங்க. அப்புறம் பாருங்க, நம்ம கட்சியும் மாநாடு - பேரணி - மீட்டிங்குன்னு கலக்கப் போவுது. ஆனா ஒண்ணு தம்பி, தமிழ்நாட்டுல எந்தக் கட்சியா இருந்தாலும் சரி... அது போணியாகணும்னா, அதுக்கு திராவிடத் தலைவர் ஒருத்தர் வரணும். சும்மா கிடந்த காங்கிரஸுக்கே ஈ.வி.கே.எஸ்.ங்கற திராவிட வாரிசு தலைவரா வந்த பிறகுதானே களைகட்ட ஆரம்பிச்சுது. அவரு மாதிரி பி.ஜே.பி.க்கு திருநாவுக்கரசரு. இவர் மட்டும் சீக்கிரமா தலைவராகல... நம்ம கட்சிக்கு சீக்கிரமே மணியாட்டிட வேண்டியதுதான்"னார் தாழ்ந்த குரல்ல.

கட்சி ஆபீஸ் ஹால்ல இருந்த வாட்டர் கூலர்ல ரெண்டு டம்ளர் தண்ணி குடிச்சிட்டு கிளம்பலாம்னு போனா, அங்க ரெண்டு பேரு நின்னு பேசிக்கிட்டு இருந்தாங்க. விஷயம், வர்ற எலக்ஷன்ல பி.ஜே.பி. எத்தனை சீட்டுல நிக்கும்ங்கறதுதான். அ.தி.மு.க. கூட்டணி (!)யில ஒரு வேளை இருந்தா முப்பது சீட்டாம். தனிச்சு நின்னா எழுபத்தஞ்சு சீட்டாம். ஒரு வேளை சில்லு வண்டு கட்சிங்களோட சேர்ந்து நாலாவது... இல்ல, அஞ்சாவது அணி அமைச்சா இன்னும் கூடுதலா நிக்குமாம். இவங்க கணக்கே நமக்குப் புரிய மாட்டேங்குது. நமக்கென்னவோ இவங்க பேசினதைக் கேட்ட பிறகு, திரும்பவும் மூணாவது பேராவுல சொன்ன பழமொழிதான் ஞாபகத்துக்கு வந்துச்சு! ●



• திருநாவுக்கரசர்

என்ன செய்தும் உங்களைச் சுற்றிப் படர்ந்திருக்கும் துன்ப வேலியை அறுத்தெறிய முடிய வில்லையா? எனில் நீங்கள் செல்ல வேண்டியது தேனிக்குத்தான். ஆம்... வாழ்க்கையில் தொடர்ந்து துன்பத்தையே கண்டு வரும் உள்ளங்களின் துயர் துடைக்க தேனியில் வீற்றிருக்கிறார் அன்னை கௌமாரியம்மன்!

முன்னொரு காலத்தில் நவ பலம் பெற்ற அரக்கன் ஒருவனால் இன்னல்கள் பல அடைந்தனர் வானவர். இந்திரன், அரி, அயன் முதலிய யாராலும் அவ்வரக்கனைக் கொல்ல முடியாது போகவே, அனைவரும் சென்று சிவனிடம் முறையிட்டிருக்கின்றனர். ஆடவர்களால் அவ்வரக்கனுக்கு மரணமில்லை என்பதை அறிந்த ஈசன், உமையவளான அன்னை பராசக்தி கௌமாரி சக்தியை அழைத்து "உனக்கு வேண்டிய படையோடு சென்று அந்த அரக்கனை அழித்து வா" என்று பணித்திருக்கிறார். அன்னை கௌமாரியும் நிம்பமாவனத்தில் எய்தி, ஈசனை நினைத்து தவமிருக்கும்போது, அசுரன் அன்னையை நெருங்கியிருக்கிறான். சிவனின் திருவருளால் அசுரனை உணர்ந்த அன்னை, தம்மருகில் இருந்த அருகம்புள்ளைக் கிள்ளி அசுரன் மீது எறிய, அது சூலமாகி அவனை இரண்டாய்ப் பிளந்து அழித்திருக்கிறது. அது முதல் துன்பங்களால் தொடர்ந்து அல்லலுருவோரைப் பாதுகாக்கும் தேவியாக அன்னை கௌமாரியம்மன் இருந்து வருகிறார்.



• புதுசு



• பழசு

ஆரம்பத்தில் தேனி நகரத்தில் தோன்றிய சுயம்பு லிங்கத்தைப் பார்த்து வியந்த மக்கள், ஆருடம் பார்க்க, அன்னை கௌமாரியம்மன்தான் சுயம்புவாகத் தோன்றியிருப்பது தெரிந்திருக்கிறது. உடனடியாய் அந்த இடத்தில் கோயில் கட்டப்பட்டு, வழிபாடும் தொடங்கியிருக்கிறது. ஐம்பது வருடங்

களுக்கு முன் மிகச் சிறிய ஆலயமாக இருந்தது. இன்றைக்கு பேராலயமாக மாறியிருக்கிறது. கௌமாரியம்மன் கோயிலில் வழிபாடு நடத்தும் பெரும்பாலானவர்கள் அல்லி நகரத்தைச் சார்ந்தவர்களாக இருக்கின்றனர். தேனிக்கு அவர்கள் வந்துபோகும் சிரமங்களைத் தவிர்க்க வேண்டி, அல்லி நகரத்திலேயே அம்மனுக்கு உற்சவ கோயிலும் எழுப்பப்பட்டு வழிபாடு செய்யப்படுகிறது. ஒவ்வொரு ஆண்டும் வைகாசித் திங்களில் மட்டும், வைகாசி பெருந்திருவிழா தேனி அருள்மிகு கௌமாரியம்மன் திருக்கோயிலில் எட்டு நாட்கள் அதிவிமரிசையாக கொண்டாடப்படுகிறது. மீதி நாள் விழா அல்லி நகரத்தில் உள்ள உற்சவ கோயிலில் கொண்டாடப்படுகிறது.

கிராமத்திருவாளர்கள் கமிட்டியாலும் இந்து அறநிலையத் துறையினரின் முயற்சியினாலும் கடந்த 26.6.04 அன்று இருபத்தைந்து லட்ச ரூபாய் செலவில் மஹா கும்பாபிஷேகம் வெகு விமரிசையாக நடைபெற்றது. இக் கோயிலின் காவல் தெய்வம் வீரபத்திரன்.

தேனி, பெரியகுளம் நெடுஞ்சாலையில் தேனி பேருந்து நிலையத்திலிருந்து சுமார் அரை கிலோ மீட்டர் தூரத்தில் அமைந்துள்ள அருள்மிகு கௌமாரியம்மன் ஆலயத்திற்கு வருகை தந்து, உங்களை விடாது சுற்றும் துன்பத்தை விரட்டி அடிப்பீர்களாக!

- ராஜதாசன்



# விடாத துன்பத்தை விரட்டியடி!



* கௌமாரியம்மன்

கோயில் பழசு; கோலம் புதுசு

மினி கதை

# தகுதி

பச.தனபாலன்



வசந்த் வீட்டுக்கு வந்தபோது அவன் அம்மா பார்வதி மகிழ்ச்சியுடன் சொன்னாள். "இனி நமக்கு நல்ல காலம்டா வசந்த். நம்ம கோயம்புத்தூர் மாமா அவர் பொண்ணை உனக்குக் கல்யாணம் செய்து தர விருப்பப்படறார்."

வசந்த் முகம் சுளித்தான். "அந்த குண்டுப் பொண்ணா? எனக்கு வேண்டாம்மா."

"சொன்னாக் கேளுடா. மாமாவுடைய நிறுவனத்திலேயே உனக்கு மாசம் பத்தாயிரம் ரூபாய் சம்பளத்திலே மேலாளர் உத்தியோகம் தர்றேன்கிறார்டா."

''யாருக்கு வேணும் அந்த மேலாளர் உத்தியோகம்?'' கோபமாய் வெளியேறினான்.

கடற்கரைக்கு வந்தான் வசந்த். அங்கே எதிர்வீட்டுப் பெண் மீராவைப் பார்த்ததும் அவன் மனம் படபடத்தது. நீண்ட நாட்களாய் அவனுக்கு அவள் மீது ஒருதலைக் காதல். இன்று தயங்கித் தயங்கி சொல்லி விட்டான். "மீரா, நான் உன்னைக் கா...காதலிக்கிறேன்."

மீரா புயலாய்ச் சீறினாள். "என்னைக் காதலிக்க உனக்கு என்ன தகுதி இருக்கு? நீ மாசம் பத்தாயிரம் ரூபாய் சம்பளம் வாங்கற மேலாளர் உத்தியோகமா பார்க்கிறே?"

வசந்த்துக்கு முகத்தில் அறைந்தாற் போலிருந்தது. ○

**இறைவனுடைய திருக்கோயில் சாதுக்களினுடைய உள்ள கோயில்களாகும்!**

## முக்தி தரும் ஸ்ரீ அன்னபூரணி க்ஷேத்ரமான

# காசியில் ஆடி அமாவாசை அன்று

## (4-8-2005) சாதுக்களுக்கு (சாது பண்டாரா) அன்னதானம் செய்ய அழைக்கிறோம்!

ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் பேரருளால் புண்ணிய க்ஷேத்ரமான காசியில் ஆடி அமாவாசை நாளில் சாதுக்களுக்கு அன்னதானம் செய்வதில் நீங்களும் பங்கேற்கலாம்

**"ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்" 7 ஆண்டுகளுக்கு மேலாக தொடர்ந்து நடத்தும் அன்னதான சேவை!**

பேரன்புடையீர் வணக்கம். அருள்மிகு 'ஸ்ரீ அன்னபூரணி அன்னை' தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம். [illegible] "ஸ்ரீ அன்ன பூரணி அன்னதான சேவா டிரஸ்ட்" [illegible]

**தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.**

- ரூ. 500 - அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் மூன்று மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ. 1000 - அனுப்பும் அன்பர்களுக்கு, தாங்கள் விரும்பும் ஏதாவது ஒரு தெய்வீக மாத இதழ் ஆறு மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ. 2000 - அனுப்பும் அன்பர்களுக்கு, தாங்கள் விரும்பும் ஏதாவது ஒரு தெய்வீக மாத இதழ் ஒரு வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ. 5000 - அனுப்பும் அன்பர்களுக்கு, தாங்கள் விரும்பும் ஏதாவது ஒரு தெய்வீக மாத இதழ் ஒரு ஐந்து வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.

குடும்பத்தில் தாய் தந்தையர்கள், மூதாதையர்களுக்கு பிண்டப்பிரதானம் மற்றும் தர்ப்பணம் காசியிலும், கயாவிலும், பிரயாகையிலும் (இம்மூன்று பித்ரு க்ஷேத்ரங்களிலும்) நேரில் சென்று செய்ய முடியாதவர்களுக்காக, [illegible] ஆடி அமாவாசை அன்று "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்" மூலம் செய்யப்படுகிறது.

பித்ருக்களுக்கு பிண்டப்பிரதானம் செய்ய காசி, கயா, பிரயாகை ஆகிய மூன்று பித்ரு க்ஷேத்ரங்களுக்கும் தனித்தனியாக ரூபாய் 1000 அனுப்புவோர் [illegible] ரூ. 5000 - அனுப்பும் அன்பர்கள் [illegible] காசி, கயா, பிரயாகை ஆகிய மூன்று இடங்களிலும் [illegible] மூன்று பித்ரு க்ஷேத்ரங்களில் ஏதாவது ஒரு [illegible] (ஆலமரம்) பிண்டப்பிரதானம் செய்தால் ஏழு தலைமுறைக்கு பித்ருக்கள் [illegible] முக்தி அடைவதுடன் பித்ரு தோஷங்களும் நிவர்த்தியாகும்.

அன்னதானத்திற்கு நன்கொடையை அனுப்புவோர் தங்களுடைய வேண்டுதலையும், பிரார்த்தனையையும் தெரிவித்தால் அதற்கேற்ப ஆடி அமாவாசை அன்று காசியில் அன்னதானம் செய்கிறோம். அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.1000, ரூ.2000, ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு காசி ஸ்ரீ அன்னபூரணி திருக்கோவிலில் பூஜிக்கப்பட்ட ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் விக்கிரகமும், ஸ்ரீ அன்னபூரணி யந்திரமும், கங்கா தீர்த்தத்துடன் கூடிய காசி சொம்பும், ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் வண்ணப்படமும், சிறிய அளவில் சிவபுராண புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.

அன்னதானத்திற்கு ரூ.5000- அனுப்பும் அன்பர்களுக்கு காசியில் பூஜிக்கப்பட்ட வலம்புரி சங்கும், ஐந்து வருடங்களுக்கு தாங்கள் விரும்பும் ஏதாவது ஒரு தெய்வீக மாத இதழும் 1024 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள ஸ்ரீமத் பகவத்கீதை புத்தகத்தையும் (தமிழில்) அனுப்பி வைக்கிறோம்.

முக்தி, நலம், தீர்த்தம் என்ற மூவகையாலும் சிறப்பு மிக்கது காசியம்பதி. [illegible] அன்னதானத்திற்கு ரூ.500/-, ரூ.1,000/-, ரூ.2,000/-, ரூ.5,000/- அனுப்பும் அன்பர் சார்பாக ஆடி அமாவாசை அன்று கங்கையில் நெய் தீபம் ஏற்றப்படும். காசியில் கங்கைக்கு பெருமை அதிகம். [illegible]

ஆடி அமாவாசை அன்று சாதுக்களுக்கு அன்னதான சேவையிலும், கங்கைக்கு நெய் தீபம் ஏற்றும் பணியிலும் ஈடுபட விரும்பும் அன்பர்கள் தங்கள் நன்கொடையை Cheque / D.D/M.O. மூலம் Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai என்ற பெயருக்கு எடுத்து கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பி கங்கா மாதாவின் புண்ணியமும், அன்னபூரணி அன்னையின் அருளையும் பெறுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.



நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வரி விலக்கு உண்டு.

**Cheque/D.D./M.O.** அனுப்ப வேண்டிய முகவரி


## ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்

**SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)**

4, Appavoo Gramani IIIrd Street (Opp. TelePhone Exchange) R.A.Puram, Chennai - 28

**TEL : 2495 9302 Fax : 044 - 5206 6525. E-mail:sivasiva @ vsnl.net**




**"காசியில் சாதுக்களுக்கு (சாது பண்டாரா) அன்னதானமிடுவது சிவனுக்கு செய்யும் ஜீவ சேவையாகும்"**

# அந்த நாள் ஞாபகம்

## திரையுலக நினைவுகள் 35

# கால்ஷீட்டுக்காக



'முந்தானை முடிச்சு' படம் பற்றி பாக்யராஜ் மனைவி பிரவீணாவின் கவலை இதுதான் : 'நிச்சயம் ஜுபிலி போகும் என்கிறீர்கள். அடுத்த படம் 'தூங்காதே தம்பி தூங்காதே' எடுத்துக் கொண்டிருக்கிறீர்கள் இந்தப் படம் நூறு நாளாவதற்குள் அதை இதே தியேட்டரில் ரிலீஸ் செய்து விடுவீர்கள்' என்றார்.

"நிச்சயம் மாட்டோம். நன்றாகப் போனால் 'தூங்காதே தம்பி தூங்காதே' படத்தை அலங்காரில் ரிலீஸ் செய்ய மாட்டோம்" என்று பிரவீணாவுக்கு உறுதி தந்தோம்.

அதே போல அந்தப் படத்தை அலங்காரில் இல்லாமல், சத்யம் தியேட்டரில் ரிலீஸ் செய்தோம்.

ஆனால், 'முந்தானை முடிச்சி'ன் வெற்றியைப் பார்த்து மகிழ பிரவீணா உயிரோடு இல்லாமற் போனது உண்மையில் எனக்கு பெரும் வேதனையைத் தந்தது.

'முந்தானை முடிச்சு' படத்தை மொத்தம் 49 இடங்களில் நாங்கள் ரிலீஸ் செய்தோம். அவற்றில் 43 இடங்களில் நூறு நாட்கள், 12 இடங்களில் வெள்ளி விழா, இரண்டு இடங்களில் இரு நூறு நாட்கள் என்று ஓடி சாதனை புரிந்தது. அதுவரை எந்தத் தமிழ்ப் படமும் பெற்றுத் தராத வசூலையும் பெற்றுத் தந்தது.

அப்போது பிரபல தெலுங்கு நடிகர் ஏ. நாகேஸ்வரராவ் அவர்களின் மகன் நாகார்ஜுனனுக்கும், பிரபல படத் தயாரிப்பாளர் டி. ராமாநாயுடுவின் மகள் லட்சுமிக்கும் திருமணம் நிச்சயமாகியிருந்தது. சென்னையில் அவர்களுக்குத் தோதான திருமண மண்டபம் ஏதும் கிடைக்கவில்லை. ஏவி.எம். ராஜேஸ்வரி திருமண மண்டபம் போன்ற ஒன்றிரண்டு மண்டபங்களும், அவர்களுக்குத் தேவைப்பட்ட தேதியில் ஏற்கெனவே 'புக்'ஆகியிருந்தன. நாகிரெட்டியாரிடம் அவர்கள் தங்கள் பிரச்னையைச் சொன்னபோது 'அதற்கென்ன, ஒரு புதிய மண்டபத்தையே கட்டித் தருகிறேன்' என்று ஐம்பதே நாட்களில் அவர் கட்டிய மண்டபம்தான் விஜயசேஷ மஹால். அது கட்டப்பட்டு வந்த சமயம் ஒரு நாள் நான் அங்கே சென்று பார்த்தேன். முந்தானை முடிச்சு விழாவை அங்கே நடத்த முடியுமா என்பதைப் பார்க்கவும்தான் அங்கே போனேன்.

அப்போது அங்கே நாகிரெட்டியாரின் லீகல் அட்வைஸர் உத்தமரெட்டி இருந்தார். மெயின் ரோட்டிலிருந்து கார் திரும்பியதும் நேராக போர்டிகோவில் நிற்பது போல் கட்டிக் கொண்டிருந்தார்கள். நான் பேசினவாக்கில் "ரொம்பவும் பிஸியான சாலை இது. நாலைந்து கார்கள்

# காத்திருந்த எம்.ஜி.ஆர்!

ஏவி.எம்.சரவணன்

ஒன்றாக வந்துவிட்டால் வெளியே டிராஃபிக் ஜாம் ஆகிவிடும். போர்டிகோவைக் கொஞ்சம் பெரிதாக மாற்றி, உள்ளே வரும் கார்களின் வழியையும் கொஞ்சம் மாற்றலாமே'' என்று சொல்லி வந்து விட்டேன்.

சில நாட்கள் கழித்து எனக்கு போன் வந்தது. ''விஜயசேஷ மஹாலில் நாகிரெட்டியார், உத்தமரெட்டி இருக்கிறார்கள். உங்களை வரச் சொன்னார்கள்'' என்று தகவல். போனால் அங்கே நாகிரெட்டியார் ''பார்த்தாயா... போர்டிகோவையும், கார் வரும் வழியையும் உன் ஐடியா படி மாற்றி விட்டேன்'' என்றார்.



நான் வியந்து போனேன். ''நீ உன் படத்தின் விழாவை இங்கேதான் வைத்துக்கொள்ள வேண்டும். உன் மண்டபத்தில் வைக்கக்கூடாது'' என்று அன்புக் கட்டளை இட்டார்.

வெள்ளி விழாவை அப்போதைய தமிழக முதல்வர் எம்.ஜி.ஆரை வைத்து நடத்த ஆசைப்பட்டோம். அவரும் சரி யென்று ஒப்புக்கொண்டு தேதி தந்தார். ஆனால் துரதிருஷ்டவசமாக எஸ்.பி. முத்துராமன் அவர்களுக்கு அப்போது கண்ணில் காடராக்ட் ஆபரேஷன் செய்திருந்தார்கள். ஒரு மாதம் ஓய்வு எடுத்தாக வேண்டும். வெளிச்சம் படக்கூடாது.

## இதுவும் 'அவர்கள்' உபயம் தான்!



* 'தூங்காதே தம்பி தூங்காதே'

எங்கள் விழா எதுவானாலும் நன்றி நவிலல் எஸ்.பி.எம்.தான். அவர் சம்பந்தப்பட்ட படமாக அது இல்லாவிட்டாலும், ஏவி. எம்மின் விழா என்றால் இறுதியில் முத்துராமன்தான் நன்றி

கூறுவார். பல ஆண்டுகளாக நிலவி வரும் இந்த வழக்கத்தை மாற்ற விரும்பாமல், விவரத்தைச் சொல்லி, 'ஒரு மாதம் தள்ளி தேதி தர வேண்டும்' என்று எம்.ஜி. ஆரிடம் கேட்டோம்.

"எல்லோரும் என் கால்ஷீட்டுக்காகக் காத்திருந்துதான் பழக்கம். இப்போது முத்துராமன் கால்ஷீட்டுக்காக என்னைக் காத்திருக்கச் சொல்கிறீர்கள். அப்படித் தானே?" என்று ஜோக் அடித்துவிட்டு நாங்கள் கேட்டமாதிரியே ஒரு மாதம் கழித்து தேதி தந்து, விழாவை மிகச் சிறப்பாக நடத்திக் கொடுத்தார்.

**போ**தைக்கு அடிமையாகி விடக்கூடாது என்பதை வலியுறுத்தி எடுக்கப்பட்ட படம்தான் 'தூங்காதே தம்பி தூங்காதே.'

இந்தப் படத்தில் கிளைமாக்ஸ் காட்சி எப்படி அமைக்கப்பட்டது என்பதற்கு சுவையான பின்னணி உண்டு.



• 'முந்தானை முடிச்சு' விழாவில்...

ஒருநாள் நான் கேஷுவலாக வித்வான் வே. லட்சுமணன் அவர்களைப் பார்த்துப் பேசிக் கொண்டிருந்தேன். அப்போது அவர் "நானும் மணியனும் ஒரு ஹிந்திப் படத்திற்காக பத்து லட்சம் ரூபாய் செலவு செய்து ஒரு கிளைமாக்ஸ் காட்சியை எடுத்தோம். ஆனால் படம் சரியாகப் போகவில்லை. எல்லாம் வீணாகி விட்டது. கிளைமாக்ஸ் காட்சி அருமையாக வந்திருந்தும் என்ன லாபம்? மக்களை அது சென்றடையவில்லையே, உங்களுக்கு வேண்டுமானால் அந்தக் காட்சி பயன்படுமா என்று பாருங்கள்..." என்றார்.

இதைக் கேட்டதும் எனக்கு ஏதோ பொறி தட்டியது. "நாங்கள் அந்த கிளைமாக்ஸ் காட்சியைப் பார்க்கலாமா?" என்று கேட்டேன்.

லட்சுமணன் அவர்கள் உடனே ஏற்பாடு செய்தார். அந்த கிளைமாக்ஸ் எனக்கு ரொம்பவும் பிடித்திருந்தது.

"இதை எனக்குக் கொடுத்து விடுகிறீர்களா?" என்று கேட்டேன்.

"தாராளமாகத் தருகிறேன்" என்று சொன்னவர், அதற்காக எங்களிடமிருந்து ஐம்பதாயிரம் ரூபாய் விலை எதிர்பார்த்தார்.

"ஐம்பதாயிரம் அதிகமாகத் தெரிகிறது" என்று நான் சொல்ல, ஒருவழியாக முப்பதாயிரம் ரூபாய்க்குப் பேசி முடித்தோம்.

கிளைமாக்ஸ் காட்சி என் கையில் தயாராக இருந்தாலும் 'தூங்காதே தம்பி தூங்காதே'வில் அதை எப்படிச் சேர்ப்பது?

விசுவைக் கூப்பிட்டனுப்பினோம்.

"இந்தக் காட்சியை இந்தப் படத்தில் பொருத்தமாகச் சேர்க்கும் வகையில் செய்யுங்கள்" என்று கேட்டுக் கொண்டோம்.

கதையில் செந்தாமரை கேரக்டரைப் புகுத்தி அதை அழகாகச் செய்து கொடுத்தார் விசு.

கிளைமாக்ஸ் 'லிங்க்' காட்சியை மட்டும் நாங்கள் பம்பாயில் படமாக்கினோம். எது ஹிந்திப் படம், எது நாங்கள் எடுத்தது என்பது தெரியாத வகையில் உரிய முறையில் எடிட் செய்யப்பட்டது.

'நானாக நானில்லை தாயே' என்று கமல் பாடும் பாடலுக்காகவே ஜமுனா

வைத் தாயாகப் போட்டோம்.

'வானம் கீழே வந்தாலென்ன... பூமி மேலே போனாலென்ன?' என்ற பாடலுக்கான காட்சி பதினேழு நாட்கள் படமாக்கப்பட்டது. எந்த கிராஃபிக்ஸ் நகாசு வேலைகளும் செய்யாமல், மிட்சல் கேமராவால் எல்லா டிரிக் காட்சிகளையும் கேமராமேன் பாபு நேரடியாகவே எடுத்தார்.

கமலுக்கு இரண்டு வேடங்கள். ஒரு வேடத்தை இன்னொரு வேடம் மிஞ்சுகிற மாதிரி கமல் நடிப்பை வெளிப்படுத்தி அசத்தினார்.



• பெஞ்ச் ஃபைட்!



• 'நானாக நானில்லை தாயே...!'

படத்தில் 'பெஞ்ச் ஃபைட்' ஒன்று வரும். பெஞ்சைத் தூக்கிச் சுழற்றி பிரமாதமாக சண்டை போடும் காட்சி. அதற்கும் உபயம் நல்லி செட்டியாரின் மகன்கள்தான். அவர்கள் தந்த வெளிநாட்டுப் படம் ஒன்றின் டேப்பைப் போட்டுப் பார்த்து, அதன் அடிப்படையில் அந்தக் காட்சி அமைக்கப்பட்டது.

அந்தப் படத்தில் இடம் பெற்ற ஹெலிகாப்டர் ஸீன், விசுவின் ஐடியா. கிளைமாக்ஸில் அந்தக் காட்சிக்காக முதலிலேயே ஹீரோ ஹெலிகாப்டரில் வந்திறங்குவது போல காட்சி அமைத்து 'எஸ்டாபிளிஷ்' செய்தோம்.

'படத்தைப் பார்த்துவிட்டு உங்கள் கருத்துகளை எழுதியனுப்புங்கள்' என்று ஒரு எழுத்தாளரிடம் வேண்டுகோள் வைத்தோம். அப்போது...

(வளரும்)

# சிறுகதை

நினைவு திரும்பி, கனமாகக் கவிந்திருந்த இமைகளை மெல்ல ஏற்றியபோது, கட்டிலின் அருகே அவரையே கவனித்தபடி, இறுகிய முகத்தோடு அமர்ந்திருந்த சீனுவைப் பார்த்தார் நாராயண ராவ். எரிச்சல் நிறைந்த அவன் முகத்திரைக்குள்ளே பிரவகித்துக் கொண்டிருந்த பிறவுயிர்ப் பாசம் அவரை வெட்கச் செய்தது. அதனால் மீண்டும் இமைகளை மூடிக் கொண்டார். ஆற்றாமையும் அவலமும் சேர்ந்த ஓர் உணர்ச்சி, இரு கண்ணீர்த் திவலையாக அவர் கடைக் கண்களில் வழிந்து காது மடல்களில் இறங்கிப் பரவியது.

"எப்படி இருக்கு சார்...?" என்றான் சீனு.

"தேவலாம்" என்றார். "நல்லா இருக்கேன்" என்று சம்பிரதாயமாகச் சொல்லலாம். அது அவனுக்குப் பிடிக்காது. எந்தச் சூழலிலும் எந்த நிலையிலும் உண்மையை மட்டும் எதிர்பார்ப்பவன் அவன். ஒரு சின்னச் சிரிப்பு முகபாவம் காட்டினாலும், அது செயற்கையாய் அடுத்தவனை ஏமாற்ற மேற்கொள்ளும் முயற்சி என்பது அவன் தத்துவம்.

"உங்களுக்கு ரொம்ப சிரமம் கொடுத்துட்டேன் சீனு" என்றார் இமைகளைத் திறக்காமலேயே. இவ்வித சூழல்களில் துணை நின்றவர்களிடம் இவ்வாறு சொல்லிப் பழகிப் போன மனசு, இயல்பாகவே அவரை அப்படிச் சொல்லத் தூண்டியது.

தளர்ந்த குரலில் வெளிப்பட்ட அவரது சொற்கள் அவனுக்கு எரிச்சலையே ஏற்படுத்தின. 'எனக்கு இதுல ஒரு கஷ்டமுமில்லை' என்று சொல்லி சம்பிரதாயமாகச் சிரிக்க அவனுக்குப் பிடிக்காது. எனவே அவர் பேச்சுக்கு எந்த மறுமொழியும் சொல்லவில்லை அவன்.

அரசு மருத்துவமனைக் கட்டிலில் கண் மூடிப் படுத்திருந்த நாராயண ராவைப் பார்த்தான். பாவமாகத்தான் இருந்தது.





ஆனால் அவர் செய்கின்ற காரியங்கள் ஏற்படுத்தும் வெறுப்பு எத்தகையது! என்ன சொன்னாலும் கேட்பதில்லை. அவர் வழியேதான் போகிறார். 'எக்கேடோ கெட்டுப்போ' என்று ஒதுங்கியிருக்கவும் முடியவில்லை. பக்கத்துக் குடியிருப்பில் இவர் படுத்தும் வேதனையை - படும் வேதனையைத் தவிர்த்துவிட்டு, பாராமுகமாய் இருப்பது எப்படி சாத்தியம்?

ஹாங்கரில் தொங்கும் சட்டைபோல எலும்புக் கூட்டின் மேல் வெறும் தோல்தான் மூடியிருந்தது. நாற்பது வயதிலேயே தொண்ணூறு சதம் நரைத்துப் போய்... எதற்காக இப்படியொரு கோலம்...

மீண்டும் கண் திறந்தார் அவர். பக்கத்தில் உட்காருமாறு அவனுக்குச் சைகை செய்தார். அவர் முகத்தைப் பார்த்தவாறு அவன் அமர்ந்ததும், "டாக்டர் என்ன சொன்னார்...?" என்று கேட்டார் மெதுவாக.

"இப்ப காப்பாத்தியாச்சு. இனிமே காப்பாத்திக்கறது உங்க பொறுப்புன்னு சொன்னாரு."

"ஒருவேளை... நீங்க சமயத்தில கொண்டு வந்து சேர்க்கலைன்னா, நான் செத்துப் போயிருப்பேனா சீனு..."

அவனுக்குச் சுரீரென்றது.

# விக்கல்

அவர் மெல்லிய புன்னகையைப் படரவிட்டு, "நீங்க கொஞ்சம் லேட்டாவே வீட்டுக்கு வந்திருக்கலாம்" என்றார்.

நறுக்கென்று அவருக்குப் பதில் சொல்ல வேண்டும் போல ஒரு கோபம் கிளர்ந்தது அவனுக்கு. ஆனால் எதுவும் கேட்கத் தோன்றாமல் அவரையே ஊன்றிப் பார்த்தான்.

அவர் தன் பார்வையை அவன் முகத்திலிருந்து விலக்கி நீளமாகச் செலுத்தினார். "எனக்குக் குடிக்கணும்னு ஆசையெல்லாம் ஒண்ணுமில்லை சீனு. ஆனா... மனசுல அதைத் தவிர வேற எண்ணமே தோண மாட்டேங்குது. குடிக்காத நேரத்துல ஒரே வெறுப்பா இருக்கு. வெறுப்புக்கூட இல்ல. ஒரு மாதிரியான வெறி... யாரைப் பாத்தாலும் கோபமா வருது. ஜுரம் வர்ற மாதிரி ஒரு ஃபீலிங். இனந் தெரியாத ஒரு துக்கம் மனசுக்குள்ள மலையா அழுத்தற மாதிரி ஒரு தவிப்பு. தண்ணிக்குள்ள அழுத்திப் பிடிச்சிக்கிட்ட மாதிரி, மரணவாசல் தெரியற மூச்சுத் திணறல்... உயிர் பிழைக்கிற வெறி மாதிரி குடிக்கணும்னு வெறி எழும். என்னால கட்டுப்படுத்த முடியறதில்ல. என்ன செய்யறது நான்...?"

"இப்படிப் பேசினா நான் என்ன சொல்றது உங்ககிட்ட?" என்றான் சீனு சலிப்போடு.

"வீட்டுக்கு எப்ப அனுப்புவாங்களாம்?"

"ரெண்டு நாள்ல டிஸ்சார்ஜ் பண்ணிறலாம்னு சொன்னாங்க."

"ரெண்டு நாளா! இன்னிக்கு அனுப்ப மாட்டாங்களா?"

அவரை முறைத்தான் அவன்.

"சரி, சாப்பிட என்ன வேணும்?"

"ரெண்டு இட்லி, காபி" என்றார்.

அங்கிருந்து புறப்பட்டான் சீனு.

மருத்துவமனை வாயி

மலரோன்

லைக் கடக்கும்போது பளீரென்று எதிர்ப்பட்ட அந்தப் பெண்மணியைப் பார்த்து திடுக்கிட்டு நின்றான். மஞ்சள் நிறச் சேலையும் கறுப்பு ரவிக்கையும் அணிந்திருந்த அந்தப் பெண்மணியிடம் சீனுவைப் பார்த்த அதிர்ச்சி எதுவுமில்லை. அறிமுகமானவரிடம் காட்டும் புன்னகையைக் காட்டி, "நல்லாயிருக்கீங்களா?" என்றாள்.

சம்பிரதாயமாகவன்றி அந்தக் கேள்விக்கு உண்மையாகச் சொல்லக்கூடிய பதிலென்று எதுவுமில்லாததால், குழப்பத்தோடு அவளைப் பார்த்தான் சீனு. அவன் பதில் சொல்லாததைப் பற்றியெல்லாம் அவள் சிறிதும் பொருட்படுத்தாமல், "எந்த வார்டு?" என்றாள். சொன்னான். அவள் அதே புன்னகையோடு அவனிடம் விடைபெற்றுக் கடந்து போனாள்.

சீனு குழப்பத்தோடு நடக்கத் தொடங்கினான். அவன் கவனம் மருத்துவமனையிலிருக்கும் நாராயணராவின் மீது கவிந்து கிடந்தது. என்ன நடக்கும் அங்கே.. பிரிந்து வாழும் தன் மனைவி திடீரென்று இப்போது தன் எதிரில் வந்து நிற்பதைப் பார்த்ததும் என்ன செய்வார் அவர்?

அவர்களுக்குள் என்ன நிகழ்ந்தது என்பது சீனுவுக்குத் தெரியாது. கணவனின் குடிப்பழக்கத்தைச் சகிக்க மாட்டாமல் அவள் பிரிந்தாளா, அல்லது அவள் பிரிவின் காரணமாக அவர் மதுவுக்கு அடிமை ஆனாரா என்பதைப் பற்றி அவன் எப்போதும் யோசித்ததில்லை.

இருவருமே மத்திய அரசு ஊழியர்கள். வளமான வாழ்க்கைக்குத் தேவையான வசதி உள்ளவர்கள். அவர்களின் ஆரம்பகால திருமண வாழ்க்கை ஓரளவு சுமுகமாகவே இருந்திருக்கக் கூடும். அதற்கு சாட்சியாக பத்து வயதில் ஒரு மகன் தாயுடன் தற்போது வாழ்ந்து வருகிறான். திருமணமாகி மூன்றாவது ஆண்டிலேயே மனைவியைப் பிரிய நேரிட்டுவிட்டது நாராயணராவுக்கு. சிறிய வாடகை வீட்டில் தனிமையில் நாராயணராவின் வாழ்க்கை கழிய, தன் பெற்றோருடன் வசதியாக வாழ்ந்து வருகிறாள் அவரது மனைவி.

இருவரையும் சேர்த்து வைக்க சிலர் மேற்கொண்ட முயற்சிகள் சீனுவுக்குத் தெரியும். நாராயணராவுக்கு அதில் உடன்பாடு இருந்தது. முடியவே முடியாது என்று மறுத்து விட்டவள் அவள்தான். சுமார் ஒரு கிலோமீட்டர் இடைவெளியில் அவர்கள் வாழ்ந்தாலும் இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக்கொள்ளும் சந்தர்ப்பம் நேர்ந்தபோதிலும், அவள் எழுப்பிவிட்ட அந்தப் பலமான தடுப்புச்சுவரைத் தாண்டிச் செல்ல முடியவில்லை நாராயணராவால்.

ஏழு ஆண்டுகளாக அவரைப் பார்க்க வராதவள், இப்போது எதற்காக வந்திருக்கிறாள் என்று யோசித்தான் சீனு. ஒருவேளை நாராயணராவ் தன் இறுதிக் கட்டத்தை நெருங்கிவிட்டதைப் புரிந்து கொண்டிருப்பாளோ?

நேற்று அவன் பார்த்த நேரத்தில் நாராயணராவ் கிடந்த கோலம்... இப்போது நினைத்தாலும் அச்சத்தையும் அருவருப்பையும் உண்டாக்கியது. தொடர்ந்து வந்த விக்கல் ஒலியைக் கேட்டு வேகமாக அவர் அறைக்குப் போனான் சீனு. கட்டிலின் அருகே தரையில் விழுந்து கிடந்தார் அவர். சிறுநீர் தெப்பமாகத் தேங்கிக் கிடந்தது. அதன் துர்நாற்றம் தொண்டையைப் புரட்டியது. கண்கள் செருகிய நிலையில், நெல் தின்ற கோழிபோல் விக்கிக் கொண்டிருந்தார் அவர். பலமான விக்கல். ஏதாவது

"டாக்டர், என் பையன் பல்பத்தை எங்கே மறைச்சி வச்சாலும் எடுத்து சாப்பிட்டுடுறான்!"

"இதெல்லாம் அந்த வயசுக்கு இயல்புதானே..."

"ஆனா, என் பேரன் பல்பத்தை காணோம்னு அழறதை சமாளிக்க முடியலையே டாக்டர்!"

- ஆர். ராதா



ஒரு விக்கலில் அவர் மூச்சு நின்று போகக் கூடிய சாத்தியக்கூறு இருப்பதை உணர்ந்தவன், உடனடியாக ஆட்டோ பிடித்து அவரை மருத்துவமனையில் சேர்த்தான். பிழைப்பார் என்ற நம்பிக்கை அவனுக்குக் குறைவாகத்தான் இருந்தது. ஆனால் பிழைத்துக்கொண்டார்.

இட்லியும் காபியும் வாங்கிக் கொண்டு மருத்துவமனை நோக்கித் திரும்பி நடந்தான் சீனு. வார்டை அவன் அடைந்தபோது நாராயணராவ் மட்டும்தான் இருந்தார். அவர் கண்களில் ஈரம் கசிந்திருந்ததைப் பார்த்தான். அவரிடம் எதுவும் பேசாமல் பொட்டலத்தை அவர் முன் வைத்தான். அவர் கை கழுவத் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தான். அவர் கட்டில் விளிம்பில் சாய்ந்தவாறு அவன் நடவடிக்கையை ஆழ்ந்து கவனித்தார். அவர் கைகழுவியதும் இட்லிப் பொட்டலத்தைப் பிரித்துத் தந்தான். சாம்பார் ஊற்றினான்.

"சீனு..." என்றார் அவர்.

"சொல்லுங்க சார்..."

"அவ வந்திருந்தா" என்றார் மெல்லிய குரலில்.

தெரியும் என்பதுபோல் பார்த்தான் அவன்.

"அவ என்ன சொன்னா தெரியுமா?"

அவன் அவர் சொல்லப்போவதைக் கேட்கத் தயாரானான். ஆனால் அவர் அவன் சொன்னதைப் பற்றி எதுவும் சொல்லவில்லை. பழைய நினைவுக்குப் போனார்.

"அவ மேல... அவ மேல..."

அவருக்கு விக்கியது. சீனுவின் முகத்தில் கலவரம் பரவியது.

"அவ மேல நான் சந்தேகப்பட்டுட்டேன் சீனு. அதனாலதான் அவ என்னை விட்டுப் போய்ட்டா. அது வெறும் சந்தேகம்தான். உண்மையா பொய்யான்னு எதுவும் எனக்குத் தெரியாது. வெறும் சந்தேகம்..."

அவருக்கு மீண்டும் விக்கியது.



''அம்மா... தாயி... உங்க வீட்ல எல்.கே.ஜில சேர்க்கற மாதிரி பிள்ளைங்க ஏதும் இருக்கா?''

''இருக்கே... ஏன் கேட்கறே?''

அப்ப உங்க வீட்ல ஒண்ணும் இருக்காது... நான் வரேன் தாயி!''

- வே. ஆறுமுகம்

''மிருகத்தனமா அடிச்சித் துன்புறுத்துற ஜாதியில்ல நான். அதுக்கான தைரியம் எனக்கு எப்பவுமே இருந்ததில்ல. ஆனா சின்னச் சின்ன வார்த்தையால கொடூரமா சித்ரவதை செய்யற குரூர மனசுக்காரன். அவளை ரணப்படுத்தற மாதிரி கேள்வி கேக்கறப்பல்லாம் அவ படற வேதனையைப் பார்த்து எனக்குள்ளே வெறித்தனமான சந்தோஷம் பொங்கும்.''

குறுக்கிட்டுப் பேச எதுவுமின்றி உறைந்து நின்றான் சீனு.

"சம்பிரதாய வார்த்தையே பிடிக்காத ஆள் நீங்க. கொல்லாம கொல்ற வார்த்தைகளோட வலி உங்களுக்குத் தெரியாதா என்ன? என் மனைவி புத்திசாலி. அந்த நரகத்துலயிருந்து தைரியமா தன்னை விடுவிச்சுக்கிட்டா. 'உங்க சந்தேகத்தை நிஜமாக்கறது எனக்கு ரொம்ப சுலபம்'னு சொல்லிட்டுப் போனா. ஒரு வருஷமா நான் படுத்தின கொடுமைக்கெல்லாம் சேர்த்து ஒரே வரியில பதில் சொல்லிட்டா."

சீனு அவரையே பார்த்துக்கொண்டிருந்தான்.

"இப்பவும் ஒரு வார்த்தை சொல்லிட்டுப் போனா..." இரண்டுமுறை விக்கல் வந்தது. சீனுவின் கலவரம் கூடியது.

"என் சந்தேகத்தை நிஜமாக்கிட்டாளாம்..."

அவர் தொண்டையிலிருந்து விக்கல்கள் வெடித்தன. சீனு டாக்டரைத் தேடி ஓடினான். அவர்கள் திரும்புவதற்குள் அது நின்று போகலாம் - நிரந்தரமாக. ○

# செய்திகள் வாசிப்பது...





# ஹீரோவுக்கு கும்மாங்குத்து!

செப்டம்பர்ல கேப்டன் மாநாடு நடத்தப் போற இடத்துல போன வாரம் 'பூமி பூசை' நடந்துதாம். வீறுநடை போட்டு 'வி' வருவாருன்னு ரசிகர்கள் பஸ், வேன், லாரின்னு தொத்திக்கிட்டு வந்து குவிஞ்சாங்களாம். ஆனா, ஆளு வரல! அதனாலென்ன, இது 'புனித காரியம் நடக்கப் போற புண்ணிய பூமி'ன்னு சொல்லி, ரசிகர்கள் அந்த மண்ணை 'திருநீறா' எடுத்து நெத்தியில பூசிக்கிட்டு போனாங்களாம். அடப்பாவிகளா, அப்ப கேப்டன் வந்திருந்தாருன்னா, அவரு காலு அங்க பட்டிருந்துச்சுன்னா, பெரிய லெவல்ல மணல் கடத்தலே நடந்திருக்கும்போல! இப்படி 'கண்ணு, மண்ணு' தெரியாம அலையற தொண்டருங்க இருக்கறப்போ, கேப்டன் 'பொங்கி எழுறதுல' தப்பேயில்லை!

கரூர் மாவட்டம் தெப்பம்பட்டியில இருந்து ஒரு 16 வயசுப் பாப்பா, 'மாமா வீட்டுக்கு போறேன்'னு வீட்டுல சொல்லிட்டு, கோவைக்கு வந்திருக்கு தனியா! சென்னைக்குப் போய் தன் அபிமான நடிகரைப் பாக்கறதா பிளான்! சென்னை ரயிலுக்குக் காத்துக்கிட்டிருந்தப்போ, போலீஸ் சந்தேகப்பட்டு விசாரிச்சு, புள்ளையோட அப்பாவ வரவழைச்சு ஒப்படைச்சாங்களாம். பாப்பாவோட அபிமான நடிகர் யாரு தெரியுமா...சத்யராஜ் பையன் சிபி! நார்வே நாட்டுல குழந்தைகளெல்லாம் தியேட்டர்ல போய் படம் பாக்கக்கூடாதுன்னு தடை போட்டிருக்காங்களாம். வன்முறை, ஆபாசம் அவங்க மனசுல பதியறதைத் தடுக்க இந்தத் தடையாம்! இப்படி இந்தியாவுல ஏதாவது தடை வந்தா, குழந்தைகளே போராட்டத்துல குதிச்சுடுவாங்க, ஆமா!

நம்ம டைட்டானிக் மச்சானை, அதாம்பா, டிகாப்ரியோவை ஒரு பொண்ணு செம குத்து குத்திடுச்சாம். லாஸ் ஏஞ்சல்ஸ்ல ஒரு விழாவுல காப்ரியோ கலந்துக்கிட்டு, மேடையிலருந்து இறங்குறப்போ, பாய்ஞ்சு வந்த அந்தப் பொண்ணு, கண்ணாடி கிளாஸால தாக்கி அவரைத் தள்ளிவிட்டிருக்கு. திருப்பித் தாக்கறதுக்குள்ள அந்தப் பொண்ணைப் பிடிச்சுட்டுப் போயிட்டாங்களாம். விசாரிச்சதுல, தன்னோட பழைய காதலனைத் தேடி வந்த அந்தப் பொண்ணு, காப்ரியோவைப் பாத்து குழம்பி அவரைக் கும்மிடுச்சாம்! ஓ.கே. ரிலாக்ஸ் காப்ரியோ, நம்மள மாதிரி பிரபலங்கள், அதுவும் அழகா இருந்துட்டா, சொஸைட்டியில இப்படி சில சம்பவங்களைச் சந்திக்கத்தான் வேண்டியதிருக்கும். என்ன நாஞ்சொல்லுறது! ○

இன்னான்

என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்



## தமிழக முதல்வருக்கு ஒரு வேண்டுகோள்!

ஜூலை 2005

உழைப்போம் உயர்வோம்



## பணம் பண்ணலாம் வாங்க!



- பொருள் ஈட்ட சேமிக்க பலவழிகள்

## வங்கிக் கணக்கில் விழிப்புணர்வு




## இரண்டு புத்தகங்கள்



புதிர்

# வந்தாச்சு...

சுடோகு - இன்று உலகத்தையே பைத்தியமாக ஆக்கிக் கொண்டிருக்கும் விஷயம். ஜப்பானிய மொழியில் 'சு' என்றால் 'எண்'; 'டோகு' என்றால் 'ஒற்றை' என்று அர்த்தம். ஆக, 'ஒற்றை எண்' என்ற சுடோகு, குறுக்கெழுத்துப் புதிர் போல முழுக்க முழுக்க எண்களால் ஆன ஒரு புதிர். இன்று பிரிட்டனிலும், ஐரோப்பிய நாடுகளிலும் எல்லா செய்தித்தாள்களிலும் தினமும் இடம் பிடித்து, சக்கைப்போடு போட்டுக்கொண்டிருக்கிறது சுடோகு.

அப்படி என்னதான் இதன் ஸ்பெஷாலிட்டி? மூன்றுக்கு மூன்று என்று ஒன்பது கட்டங்கள் கொண்ட ஒரு பெட்டி. இப்படி ஒன்பது பெட்டிகள் கொண்ட சதுரத்தில் மொத்தம் 81 கட்டங்கள். எதை எடுத்துக்கொண்டாலும், ஒவ்வொன்றிலும் ஒன்று முதல் ஒன்பது வரையிலான எண்களை, ஒரே ஒரு முறை மட்டும் பயன்படுத்தி கட்டங்களை நிரப்ப வேண்டும் என்பதுதான் ஒரே விதி. ஒரு சுடோகுவுக்கு ஒரே ஒரு சரியான விடைதான் உண்டு.

'சுடோகு' இப்படி ஓஹோ என்று பிரபலமடைய என்ன காரணம்?

குறுக்கெழுத்துப் புதிர் என்றால் மொழி ஒரு முக்கிய அம்சம். தவிர, குறுக்கெழுத்துப் புதிர்களை விடுவிக்க நிறைய மொழி அறிவும், திறமையும், அனுபவமும் தேவை. ஆனால் சுடோகுவில் எண்கள் மட்டுமே பயன்படுத்தப்படுவதால், மொழிகளுக்கு அப்பாற்பட்டு, அனைத்து நாட்டு மக்களையும் இது கவர்ந்துவிட்டது. தவிர, உலக அளவில் பத்திரிகைகளில் இதற்கு சமீபகாலமாய் தரப்படும் முக்கியத்துவமும் ஒரு முக்கியக் காரணம்.

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 8 | | | | | | | | |
| | | | | | | 7 | 6 | |
| 5 | 3 | | | 4 | 1 | | | |
| | | 7 | | | 9 | 3 | 6 | |
| 4 | | | | 3 | | | | 2 |
| | 5 | 3 | 6 | | | 8 | | |
| | | | 3 | 2 | | | 5 | 4 |
| | | 9 | 1 | | | | | |
| | | | | | | | | 3 |

# சுடோகு வந்தாச்சு...!




ஜப்பானில், சுடோகுவுக்கென்றே பிரத்யேகமான பத்திரிகைகள் வெளியிடப்படுகின்றன. அந்தப் பத்திரிகைகளின் விற்பனை, மாதம் ஆறு லட்சம் பிரதிகளைத் தாண்டிவிட்டது. பிரிட்டனில், சுடோகு புதிர் புத்தகங்கள் சக்கைப் போடு போடுகின்றன. பார்க்குகளிலும், ரயில் நிலையங்களிலும் சுடோகு புதிர்களில் மூழ்கிப் போன மனிதர்களை லண்டனில் காணலாம். நியூயார்க் டைம்ஸ் பத்திரிகை, தனது வழக்கமான குறுக்கெழுத்துப் புதிருக்குப் பக்கத்திலேயே, 'வாசகர்களின் வேண்டுகோளை நிறைவேற்றும் விதமாக' விரைவில் சுடோகு புதிர்களை வெளியிடப் போவதாக அறிவித்துள்ளது. அமெரிக்காவில் சுடோகு டெலிவிஷன் நிகழ்ச்சிகள் விரைவில் ஆரம்பிக்கப் போகிறார்கள்.

உலகம் முழுக்க பரபரப்பூட்டிக் கொண்டிருக்கிற சுடோகு புதிர்களை உருவாக்கி விநியோகித்துக் கொண்டிருப்பவர், ஹாங்காங்கில் வசித்துவரும் நியூஸிலாந்துக்காரரான வேயன் கௌட். இவர் ஒரு ரிடையர்டு நீதிபதி. 1997 முதல் இவர் சுடோகு புதிர்களை உருவாக்குவதில் ஈடுபட்டு வருகிறார். பத்திரிகைகளுக்கு சுடோகு புதிர்களை இப்போது கட்டணம் ஏதும் வசூலிக்காமல், இலவசமாகவே அளித்தாலும், பத்திரிகைகள் மூலம் கிடைக்கும் பப்ளிசிட்டி, புத்தக விற்பனைக்கு உதவும் என்பது இவரது கணக்கு. இந்த வருடம் மட்டும் புத்தக விற்பனை மூலம், இவருக்கு நாலரை கோடி கிடைக்கும் என்கிறார்கள்.

சுடோகு புதிர்களுக்காக நிறைய இணைய தளங்கள் உள்ளன. அவற்றில் ஒன்று www.sudoku.com. சில இணைய தளங்கள் தினம் ஒரு புதிர் வெளியிடுகின்றன. மறுநாள் விடை கிடைக்கும். மிகவும் எளியது முதல் மிகவும் கஷ்டமானவை வரை, பல்வேறு ரக சுடோகு புதிர்கள் உள்ளன. பத்தே நிமிடத்தில் விடை காண்பவர்களும் உண்டு, இரண்டு மணி நேரம் முயற்சித்தும் விடை கிடைக்காமல் திண்டாடுகிறவர்களும் உண்டு. நீங்கள் எந்த ரகம்? இங்கே தரப்பட்டுள்ள சுடோகு புதிரை விடுவிக்க முயற்சி செய்து பாருங்களேன்! முடியாதவர்கள் பக்கம் 95க்கு வாங்க.

- கௌதம் ராம்

# ஜெயலலிதாவிடம் கேட்கக் கூடாத பத்துக் கேள்விகள்

1. மேடமுக்குப் பிடிச்ச இசைக் கருவி ஜால்ராவா, இல்லை ஊதுகுழலா?

2. 'நானே காரணம்', 'என்னால்தான் ஆனது'ன்னு தூக்கத்துலகூட உளறுவீங்களாமே?

3. உங்களுக்குப் பிடிச்சது 'பன்னீர்' சோடாவா? 'காளி' மார்க்கா?

4. கட்சியில குட்டித் தலைவர்களைவிட பெட்டித் தலைவர்கள்தான் அதிகமாமே?

5. மந்திரிசபையை இஷ்டத்துக்கு பந்தாடுகிற உங்களோட கோல்தான் என்ன?



6. உங்களுக்குப் பிடிக்கும்னுதான் கட்சிக்காரங்க மேடையில கூட 'பச்சை பச்சை'யா பேசறாங்களா?

7. 'ஹவ் ஆர் யூ'ன்னு கலைஞர்கிட்ட கடைசியா எப்ப கேட்டீங்க?

8. உங்க வீட்டு டீவியில சன், பி.பி.சி சேனல்களே வராதாமே?

9. தோழி உப்பு தின்னா, நீங்க தண்ணி குடிப்பீங்களா?

10. இது 'மாம்பழ' ஸீஸனாச்சே... 'மாம்பழ'த்தை இன்னுமா விலைக்கு வாங்கலை?

## மாம்பழத்தை எப்ப விலைக்கு வாங்கப் போறீங்க?

பரமு

சாதனை



# தமிழ்நாட்டு மேனகாகாந்தி!

சக்திப்ரியா

மாடு முட்டை போடுமா? ஆடு குஞ்சு பொறிக்குமா, என்று கேட்டாலும் கோபமே படாமல், கால்நடைகள் பற்றி வால் வேறு கால் வேறாக அலசுவார் நாமக்கல்லைச் சேர்ந்த சக்திப்ரியா. கால்நடை மருத்துவ மாணவியான இவர், இறுதியாண்டு படிப்பில் நிகழ்த்திய சாதனைகளுக்காக சமீபத்தில் கவர்னர் கையால் இருபத்தியொரு தங்கப் பதக்கங்கள் வாங்கியிருக்கிறார்.

வெயிட்... வெயிட்... படிப்பதற்கு ஆயிரம் படிப்புகள் இருக்க, கால்நடைத் துறையை இவர் தேர்ந்தெடுக்கக் காரணம்? கிராமத்துப் பெண்களுக்கேயுரிய வெள்ளந்தியான பேச்சோடு ஃப்ளாஷ் பேக்கைக் கூறுகிறார்.

“நான் பத்தாம் வகுப்பு பொதுத் தேர்வுல ஸ்கூல் ஃபர்ஸ்ட் வந்ததுக்கு 'Animal Physiology'ங்கிற புத்தகத்தை பரிசாக் கொடுத்தாங்க. அதோட இருநூறு பக்கங்களையும் படிக்கப் படிக்க நான் காட்டுக்குள்ள பயணிச்சு, விலங்குகளோட வாழ்றதா ஃபீல் பண்ணினேன். அந்த ஆர்வத்தில் கால்நடை மருத்துவம் படிக்கக் கிளம்பிட்டேன்” என்று உற்சாகமாகத் தலையாட்டுகிறார்.

இடுப்பு மூட்டு தேய்மானத்தால் அப்பா வேலைக்குச் செல்ல முடியாமல் போக, அண்ணனின் வருமானத்தில் வண்டியோடும் குடும்ப சூழ்நிலைக்கிடையேதான் இச்சாதனையை நிகழ்த்தியிருக்கிறார்.

கவர்னர் கையால் விருது வாங்கும் அளவுக்கு படிப்பில் வெளுத்து வாங்கிய சக்திப்ரியா, அடுத்ததாக இதே துறையில் முதுகலை படிப்பு, அப்படியே ஐ.ஏ.எஸ்.க்கும் முயற்சிப்பது என இரட்டை மாட்டு வண்டியில் பயணம் செய்யவிருக்கிறார்.

“விலங்குகளைத் துன்புறுத்தும் நம் சமூகத்தின்மீது கோபமுண்டா?” என்றால் மறுக்கிறார். “ஒரு மனுஷன் அடிபட்டுக் கிடந்தால் கூட பரபரப்பாக தங்கள் வேலையைப் பார்க்கும் மனிதர்கள், இதே நாயோ, பூனையோ அடிபட்டுக் கிடந்தால் நல்ல பிள்ளையாக மருத்துவமனையில் கொண்டு வந்து சேர்க்கிறார்கள் தெரியுமா!” என குதூகலிக்கிறார்.

மேனகாகாந்தி, அமலா வரிசையில் தமிழ்நாட்டுக்கும் ஒருத்தர் கிடைச்சாச்சு!

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

**மினி கதை**

# ஜன்னல் சீட்!

பேருந்து புறப்பட்டதுமே வேகம் பிடித்தது. ஜன்னலோரத்தில் அமர்ந்து வெளிப்புறக் காட்சிகளை ரசித்துக்கொண்டு வந்த என்னை நோக்கித் திரும்பினார், என் மாமா கார்த்திகேயன்.

"இந்தப் பக்கம் உட்காரு... நான் ஜன்னலோரம் உட்கார்றேன்."

"இல்லை மாமா, இங்கேயே



உட்கார்ந்து வர்றேன்."

"சொன்னாக் கேளுடா, வான்னா வா..."

எரிச்சலாக வந்தது. பதினாறு வயசுப் பையனின் உணர்ச்சிகளை ஏன் புரிந்து கொள்ள மறுக்கிறார் என்று கோபம் கோபமாக வந்தது. முன் சீட்டில் என்னைப் போன்ற ஒரு இளைஞன் ஜன்னலோர இருக்கையில் அமர்ந்து, தன்னைக் கடந்து செல்லும் காட்சிகளை ரசித்துக் கொண்டு வந்தான். இந்த மாமா என்னடா வென்றால், ஜன்னலோர சீட் தனக்கு வேண்டுமென்று அடம் பிடிக்கிறார், ச்சே!

"மாமா நீங்க வெத்தல பாக்கும் போட மாட்டீங்க... பின்ன எதுக்கு ஜன்னலோரம் உட்காரணும்னு அடம் பிடிக்கிறீங்க... நான்தான் இயற்கைய ரசிச்சிட்டு வர்றேன்ல..."

"உன் நல்லதுக்குத்தான்டா சொல்றேன், வாடா."

"தூசு விழும்னுதானே... காத்து அடிக்கும்போது நான் கண்ணை மூடிக்கிறேன்!"

"இப்ப வரப் போறியா இல்லியா?" மாமா கோபத்தில் கத்த, நடுங்கிப் போனேன். எழுந்து அவருக்கு ஜன்னலோர சீட்டை விட்டு விட்டு, தள்ளி உட்கார்ந்தேன். நான் கோபித்துக் கொண்டதைக் கவனித்த மாமா, என்னைச் சமாதானப்படுத்தும் விதமாக என் முடியைக் கோதிவிட்டார். கையைத் தட்டிவிட்டேன்.

"அதுக்கில்லடா, நான் எதுக்குச் சொல்றேன்னா..."

"எதுக்கு? உங்களுக்கு காத்து நல்லா வரணும்... அவ்வளவு தானே...?"

"அதுதான் இல்ல... நான் வயசானவன். நீயோ சின்னப் பையன். நான் வாழ்ந்து முடிச்சவன். இன்னும் நீ வாழவே ஆரம்பிக்கல. சாதாரணமா விபத்து நடக்கறது பக்கவாட்லயோ, இல்லன்னா முன் பக்கமாவோதான் நடக்கும். ஏதாவது ஏடாகூடமா நடந்தா நீ ஈசியா தப்பிக்கலாம் பாரு... அதுக்குத்தான் உன்னை இந்தப் பக்கம் வரச் சொல்லிட்டு நான் ஜன்னலோரம் உட்கார்ந்தேன்..." மாமா பேசிக்கொண்டே போக, என் மனம் நெகிழ ஆரம்பித்தது.

தீஜு

# வலைபாயுதே

## ஹலோ பிரதர்!

### தகவல் :

நமக்குப் பின் பிறந்த நம் சகோதரனை நம்மால் முழுமையாகப் புரிந்துகொள்ள முடியாமல் போகலாம். சகோதரனிடம் பிடிவாதம் அதிகம் இருக்கலாம். பிரச்னைகள் தொடர்ந்துகொண்டே இருக்கலாம். தீர்வுகள் காலதாமதமாகிக் கொண்டே போகலாம். ஆம்... அந்த சகோதரனின் பெயர் பாகிஸ்தான். சகோதரனைப் பற்றி உங்களுக்கு எவ்வளவு தெரியும்? அல்லது தெரிந்துகொள்ள ஆசைப்படுகிறீர்களா?



www.storyof pakistan.com<http://storyofpakistan.com> போங்க. பாக்கின் வரலாற்றை (12ம் நூற்றாண்டிலிருந்து) உச்சி முதல் பாதம் வரை தெரிந்துகொள்ளலாம்.

### டௌன்லோட் :

நாளொரு மேனியும், பொழுதொரு அப்டேட்டுமாக வலம் வரும் கூகுளின் அடுத்த படைப்பு 'Google Desktop Search'. எதற்கு இது? இப்போ நீங்க உங்க தோழி 'சானியா'வுக்கு போன வாரம் ஒரு மெயில் அனுப்பியிருக்கலாம். அவளோட படங்கள் ஏழெட்டை போன மாசம் சிஸ்டத்துல போட்டு வைச்சிருக்கலாம். அவ பேரை எப்பவாவது ஒரு டாக்குமெண்ட்லயோ, எக்ஸெல் சீட்லயோ டைப் பண்ணியிருக்கலாம். இப்ப நீங்க desktop.google.com-க்கு போய், டெஸ்க் சர்ச்-ஐ இலவசமா டௌன்லோட் பண்ணிட்டு, சர்ச் பாக்ஸ்ல 'சானியா'ன்னு தட்டி விட்டாப் போதும். சகல சானியா வகையறாக்களும் க்யூ கட்டி நிற்கும். அவுட்லுக், நெட்ஸ்கேப், இன்டெர்நெட் எக்ஸ்ப்ளோரர், மோஸில்லா என வலைப்பக்க பழைய வரலாற்றையும் தோண்டியெடுத்துத் தருகிறது இது. எல்லாம் ஓ.கே. இதற்கும், நம்ம சிஸ்டத்திலுள்ள 'சர்ச்'க்கும் என்ன வித்தியாசம்னு உங்களுக்குள் ஒரு கேள்வி எழலாம். பதில் : வேகம், துல்லியம், ஈஸியான இன்டெக்ஸ் சர்ச்... ம் இது தேடலின் அடுத்த பரிணாமம்!

### வலைப்பதிவு :

திருநெல்வேலி மாவட்டம் கங்கைகொண்டானில் திறக்கப்படவிருக்கும் கோக் கம்பெனியை எதிர்த்து மக்கள் கிளர்ச்சி. இக் கம்பெனி நாளொன்றுக்கு தாமிரபரணியிலிருந்து 5 லட்சம் லிட்டர்கள் தண்ணீரைப் பயன்படுத்த அரசால் அனுமதிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் 30 லட்சம் லிட்டர்களை உறிஞ்சுமென மக்களால் அச்சம் தெரிவிக்கப்படுகிறது. சுற்றுப்புற விவசாயிகள் தாமிரபரணியையே நம்பியிருப்பதால் தண்ணீர்த் தட்டுப்பாடு ஏற்பட்டுவிடுமென அஞ்சுகிறார்கள். மேலும் கோக் தொழிற்சாலை வெளியிடும் கழிவுகள், இருக்கும் சுற்றுப்புறத் தண்ணீரையும், விளைநிலங்களையும் பாழடிப்பதாகவும் உதாரணங்கள் இருக்கின்றன. இந்த கோக்கை நாம புறக்கணிக்கணுமா வேண்டாமா? கங்கை கொண்டான் தண்ணியை கோக் உறிஞ்ச விடலாமா? (sundaravadivel.blogspot.com/2005/06/blog-post_18.html - வலைப்பதிவிலிருந்து)

* நெட் பைத்தியம் முத்தினா இப்படித்தான்!





* பஷீர்

# ஒரு காதலன், ஒரு காதலி, ஒரு டைரி!

பா.ராகவன்

விவரிக்கவே முடியாத அளவுக்கு மகத்தான ஒரு படைப்பைக் கொலை செய்வது எப்படி என்று உங்களுக்குத் தெரியுமா?

சம்பந்தப்பட்ட படைப்பை ஒரு வரியில் சுருக்கிச் சொல்வதன் மூலம் அதனை மிகச் சிறப்பாகச் சாதிக்கலாம். பார்க்கலாமா?

ஓர் ஆண். ஓர் இளம்பெண். இவனுக்கு அவள் மேல் காதல். அவள் வேறு ஜாதியைச் சேர்ந்தவள். ஆகவே காதல் கைகூடுவதில் சிக்கல். அவளுக்கு வேறு இடத்தில் திருமணம் ஆகிறது. இவன் தன் சோகத்தை மறைத்துக் கொண்டு அவளுக்கு ஆசி கூறி அனுப்பி வைக்கிறான்.

இதுதான். இவ்வளவுதான் கதை. எந்த ஆரம்ப எழுத்தாளரும் எழுதும் முதல் கதைபோலத் தெரிகிறதா? எழுதி அனுப்பினால், மறு தபாலிலேயே திரும்பி வந்துவிடும் என்று தோன்றுமே? பார்க்காமலே காதல், பேசாமலே காதல், தெரியாமலே காதல், புரியாமலே காதல் என்று காதலின் எத்தனையோ குறுக்குச் சந்துகளையெல்லாம் பார்த்து முடித்துவிட்ட பிறகு இதென்ன சாதாரணக் காதல் என்று தோன்றுகிறதல்லவா?

ஆனால், மேற்சொன்ன காதல் கதையை எழுதியவர் ஆரம்ப எழுத்தாளர் அல்லர். இந்தியாவில் எழுத்துத் துறையில் ஈடுபட்டிருக்கும் அத்தனை பேரையும், ஒரு கதையாவது இவரைப் போல நாம் எழுதிவிடமாட்டோமா என்று இன்றளவும் ஏங்கச் செய்து கொண்டிருக்கும் ஒரு மாபெரும் படைப்பாளி. அவரது மொழிக்கு நிகரே சொல்ல முடியாது. கொப்பளிக்கும் நகைச்சுவையும், நம்ப முடியாத எளிமையும், ராகமும் லயமும் கொண்ட ஒரு தனி மொழி அவருடையது. மண் வாசனை என்று வார்த்தையில் சொல்லுவதல்ல, அவரது ஒவ்வொரு படைப்பை வாசிக்கும்போதும் நமது நாசிக்கு எட்டும் வாசனை அது.

எழுத்தில் சாதிக்கக்கூடிய அத்தனை சிகரங்களையும் தொட்டுப் பார்த்துவிட்டவர் அவர். கஷ்டப்பட்டு அல்ல, மிக அநாயாசமாக. பிரமாதமான எந்த விருதுகளையும் அவர் பெற்றதில்லை. ஆனால் உலகில் உள்ள அத்தனை விருதுகளையும் மூட்டைகட்டிச் சேர்த்துக் கொண்டவர்களெல்லாம், அவர் பெயரைச் சொன்னால் எழுந்து நிற்பார்கள். பிரசித்தி பெற்ற குடிகாரர். ஊர் ஊராகத் திரியும் முஸ்லிம் பக்கிரி. சூஃபி சந்நியாசி. மாபெரும் காதலன். சுதந்தரப் போராட்ட வீரர். வாழ்நாளில் பல மாதங்களைச் சிறையில்

" 'ஆத்திரக்காரனுக்கு புத்தி மட்டு'ன்னு சொல்றது சரியில்லையா?"

"பின்னே, நீங்க ஆத்திரக்காரர்கூட இல்லையே..."

- கே.ஆனந்தன்



கழித்தவர். பைத்தியம் பிடித்து, மனநல மருத்துவமனையில் இருந்தவர். வயதாகி, தலை வழுக்கையான காலத்தில் திருமணம் செய்து கொண்டவர். ஒரு வேளை உணவுக்கு அடுத்தவரை எதிர்பார்த்திருந்தவர். அவரே பின்னாளில் பேப்பூர் சுல்தான் என்றும் அழைக்கப்பட்டவர்.

இன்னும் சொல்லலாம். வைக்கம் முகம்மது பஷீருக்கு எந்த அடையாளமும் பொருந்தும். ஆனால் எல்லா அடையாளங்களும், எழுத்தாளர் என்கிற ஒரு மாபெரும் அடையாளத்துக்கு அப்புறம் தான்.

பஷீர் மாதிரி ஓர் எழுத்தாளர் கண்டிப்பாகத் தமிழில் கிடையாது. அநேகமாக இந்தியாவில் வேறெந்த மொழியிலும் கூடக் கிடையாது. அதேபோல, குறுநாவல் என்கிற இலக்கிய வடிவத்தை அவரளவுக்குச் செம்மையாக உபயோகித்தவர்களும் கிடையாது. மாபெரும் நாவல்கள் என்று அவர் எதையுமே படைக்கவில்லை. ஆனால் எந்த ஒரு மகத்தான படைப்பைக் காட்டிலும் ஏதாவது ஓர் அம்சத்திலாவது அவரது எல்லாக் கதைகளும் சிறந்து நிற்கும்.

அவரின் புகழ்பெற்ற படைப்புகளுள் ஒன்று அனுராகத்தின் தினங்கள். நீங்கள் இதனை அவசியம் படித்திருப்பீர்கள். வையவனின் அபாரமான மொழிபெயர்ப்பில் பல ஆண்டுகளுக்கு முன்னால் கல்கியில் தொடராக வெளிவந்த படைப்பு. அனுராகத்தின் தினங்கள் என்கிற தலைப்பை, அதன் முழு அர்த்தத்துடன் தமிழாக்குவதென்றால், காதல் காலம் என்று சொல்லலாம். உண்மையில் இது ஒரு காதலனின் டைரிக் குறிப்புகள்.

பொதுவாகவே பஷீர் தமக்கு நேராத எது ஒன்றையும் எழுதியதில்லை. தம் சொந்த வாழ்வின் அனுபவங்களிலிருந்து மட்டும்தான் அவர் கதைகளை உருவாக்குவார். கதையில் எத்தனை சதவிகிதம் அவரது வாழ்க்கை கலந்திருக்கிறது, எது கற்பனை என்று இனம் பிரித்துக் கண்டுபிடிப்பது கஷ்டம். அதுதான் அவரது கதையின் வெற்றி.

ஆனால் அனுராகத்தின் தினங்களைப் பொறுத்தவரை, அந்தக் கதையில் கற்பனை துளியும் கிடையாது என்று அடித்துச் சொல்கிறார்கள், பஷீருக்கு மிகவும் நெருக்கமான சகாக்கள்.

பஷீர் தம் வாழ்நாளில் சிலகாலம் திருச்சூரில் வசித்திருக்கிறார். (அவர் எங்கேதான் வசிக்கவில்லை? கேரளாவின் பல பகுதிகள் தொடங்கி, இமயமலை வரை சஞ்சரித்துக் கொண்டே இருந்தவர் அவர்.) அந்தக் காலத்தில் சரஸ்வதிதேவி என்கிற ஒரு கல்லூரி மாணவியின் பழக்கம் அவருக்கு ஏற்பட்டது. சரஸ்வதிதேவி, தனது கல்லூரிப் போட்டி ஒன்றுக்காகக் கட்டுரை எழுதி வாங்கவே பஷீரிடம் வந்தாள். பெரிய எழுத்தாளர். அவர் எழுதிக் கொடுத்துப் பேசினால் பரிசு கிடைக்குமே என்று அவள் எண்ணியிருக்கலாம்.

பஷீர் அவளுக்குக் கட்டுரை எழுதிக் கொடுத்தார். சரஸ்வதிதேவி நினைத்தது போல அவளுக்குப் பரிசும் கிடைத்தது. அதற்குப் பிறகுதான் இருவரும் அடிக்கடி சந்திக்க ஆரம்பித்தார்கள்.

சரஸ்வதிதேவி, ஒரு நாயர் குடும்பத்துப் பெண். பெரிய அழகி. பஷீருக்கு அவள் மேல் ஓர் ஈர்ப்பு ஏற்பட்டது. நாளடைவில் அது காதலும் ஆனது. சரஸ்வதிக்கும் பஷீர் மீது காதல்தான். ஆனால் வெளிப்படுத்த முடியாத காதல்.

அவளுக்கு வீட்டில் வரன் பார்க்க ஆரம்பித்தபோதுதான் இருவரும் தம் காதலைப் பரிமாறிக் கொண்டிருக்கிறார்கள். தனக்கு வேறு ஒருவருடன் திருமணம் செய்து விடுவார்கள் என்று சரஸ்வதிதேவி பயந்தபோது, பஷீருடனேயே வந்துவிடவும் தயாராகத்தான் இருந்திருக்கிறாள். மறுத்தது பஷீர்தான்.

அதற்கான காரணத்தைத்தான் கவனிக்க வேண்டும். பஷீருக்குத் தம் வாழ்க்கை முறைமீது கொஞ்சம் அச்சம் இருந்தது. நிரந்தரமில்லாத வருமானம். உத்தியோகம் என்று எதுவும் இல்லை. எழுதிப் பிழைக்கும் வாழ்க்கை. தவிரவும் சரஸ்வதி தேவியை அவர் மணந்து கொண்டால், அவளது குடும்பம் சிதையும். பிரச்னைகள் வரும். அவமானத்தில் அவளது குடும்பத்தினர் என்ன முடிவும் எடுக்கலாம்.

இவ்வாறெல்லாம் யோசித்த பஷீர், சரஸ்வதிதேவியைக் கூப்பிட்டுப் பேசி, அவளது பெற்றோர் பார்த்துவைத்த பையனையே திருமணம் செய்து கொள்ளச் சொல்லி அனுப்பி வைத்தார்.

திருமணத்தை மாற்றிவிடலாம். காதலை மறக்க முடியுமா? சரஸ்வதியைச் சந்தித்த தினம் தொடங்கி, பஷீர் அவளையே கதாநாயகியாக வைத்து ஏராளமான சிறுகதைகள் எழுதியிருக்கிறார். அவற்றையெல்லாம் முதலில் அவர் அழித்தார். அவளுக்கு எழுதி அனுப்பிய / அனுப்பாத நூற்றுக்கணக்கான காதல் கடிதங்களையும் அழித்தார். ஆனால் அவளைப் பற்றி தினசரி அவர் எழுதிய நாட்குறிப்புகள் மட்டும் எப்படியோ தப்பித்து விட்டன.

பின்னாளில் பஷீரின் அனைத்துப் படைப்புகளையும் ஒன்று விடாமல் தொகுத்து வெளியிடுவது என்று அவரது நண்பர்கள் தீர்மானித்து, (இந்த நட்பு வட்டத்தில் பிரபல மலையாள எழுத்தாளர் எம்.டி. வாசுதேவன் நாயர், சுகுமார் அழிக்கோடு, என்.பி. முகம்மது, எம்.எம்.பஷீர் ஆகியோர் இருந்தனர்) கிளாசிக் புக் டிரஸ்ட் என்றொரு அமைப்பை ஏற்படுத்தினர். அதற்கான பணிகளில் அவர்கள் இறங்கியபோது, இந்தக் குறிப்பிட்ட டைரி அவர்களிடம் கிடைத்தது.

கடைசியாக ஒரே ஓர் அத்தியாயம் மட்டும் எழுதிச் சேர்த்தால் பூரணமாகி விடும் என்று நினைத்து பஷீரிடமே போய்க் கேட்டார்கள்.

பஷீர் முதலில் மிகவும் யோசித்தார். பிறகு என்ன தோன்றியதோ, விறுவிறுவென்று அந்த டைரிக்கு ஒரு முடிவுரை எழுதிக் கொடுத்துவிட்டார்.

'அனுராகத்தின் தினங்கள்' உருவான கதை இதுதான்.

நிஜத்தில் சரஸ்வதிதேவிக்கு பஷீரின் மீது காதல் என்று தெரிந்தபோது, அவளது தாய் தண்டவாளத்தில் தலை வைத்துப் படுத்துவிட்டாராம். ஊர்க்காரர்கள் பார்த்து, காப்பாற்றியிருக்கிறார்கள்.

பஷீர் தம் வாழ்வில் மிகவும் மறக்க விரும்பி, ஆனால் மறக்கவே முடியாத பகுதி அது. சரஸ்வதிதேவி. கண்ணாடி போட்ட சரஸ்வதிதேவி. பேச்சுப் போட்டிக்கு எழுதிக் கொடுக்கக் கேட்ட சரஸ்வதி தேவி. பஷீரின் அந்தக் கடைசி வரிகள்தான் நினைவுக்கு வருகின்றன.

"போய் வா சரஸ்வதிதேவி! தீர்க்க சுமங்கலியாக இரு. கடவுள் உன் பக்கம் இருப்பார்."

வலி மிகுந்த காதல் அது. பஷீரின் உன்னதமான எழுத்தாற்றலால் சாகாவரம் பெற்றதாகிவிட்டது.

(தொடரும்)



"உமா! உன் அன்பால் என் கைகளை கட்டிப் போட்டு விட்டாயே!"

"அதையே சாக்கா வைச்சு, காசு எடுத்து சுண்டல் வாங்கித் தராம இருந்துடாதீங்க!"

- கு.அருணாசலம்

# நீங்கள் கேட்டவை

# காவல் துறை மிகவும் களங்கப்பட்டுள்ளதே..?

● டி.கே.சுப்பிரமணியன், பெங்களூர்

? நரேனுக்கும் சானியாவுக்கும் ஏற்பட்ட சரிவுக்கு அவர்களுக்குக் கிடைத்த அதிகமான புகழ்ச்சி ஒரு காரணமாக இருக்குமா?

! கோயம்புத்தூரிலிருந்து ஒரு ஃபார்முலா ஒன் ரேஸில் கலந்து கொள்வதென்பதே மெச்சக்கூடிய சாதனைதான். நம்ம ஹைதராபாத் பெண்ணுக்குக் கணுக்காலில் அடி. அதையும் மீறி விம்பிள்டன் முதல் மேட்சை ஜெயித்துள்ளார்.

● என். பாலகிருஷ்ணன், மதுரை

? "காமராஜர், எம்.ஜி.ஆர். ஆகியோர் இருந்திருந்தால் நான் அரசியலுக்கு வந்திருக்க மாட்டேன்" என்கிறாரே விஜயகாந்த்?

! அவர் மட்டும்தானா...? வேறு பலரும் கூடத்தான்!

● சி. கார்த்திகேயன், சாத்தூர்

? சனி - ஞாயிறுகளில் ஹாலிவுட் திரைப்படங்களின் மொழி பெயர்ப்புகளை ஒளிபரப்ப ஏதேனும் தடை விதித்தால் என்ன?

! நல்ல படங்களைத் தேர்ந்தெடுத்து சிறந்த மொழிபெயர்ப்புடன் ஒளிபரப்பினால் பாராட்டலாம். நல்ல படங்களை மோசமான மொழிபெயர்ப்புடன் ஒளி பரப்பினால் பொறுக்கலாம். மோசமான படங்களை மோசமான மொழிபெயர்ப்புடன் ஒளிபரப்பினால் டி.வி.யை அணைத்து விடலாம். தடை எதற்கு?

● க. வேடியப்பன், கும்மிடிப்பூண்டி

? திண்டுக்கல்லில் சுயேட்சை கவுன்சிலர் ஒருவர், அரைகுறை ஆடையுடன் நடனம் ஆடியுள்ளது எதைக் காட்டுகிறது?

! சினிமாவின் ஆபாசம் அரசியலில் ஊடுருவி வருவதை.

● எஸ்.வி. அமிர்தகௌரி, தூத்துக்குடி

? பொதுமக்களோடு வரிசையில் நின்று ஓட்டுனர் உரிமம் பெற்றுள்ளாரே ராகுல் காந்தி?

! நல்ல முன்னுதாரணம்தான். அவரிடம் அதிகாரிகள் நிச்சயம் லஞ்சம் கேட்டிருக்கமாட்டார்கள். அந்த முன்னுதாரணத்தை மற்றவர்களிடமும் அவர்கள் பின்பற்றினால் நல்லது. ஹூம்! பெருமூச்சு கேட்கிறதா?

● வே.நா. கதிர்வேல், வேலூர்

? தமிழகக் காவல் துறை மிகவும் களங்கப்பட்டு விட்டதே?

! போலீஸை வேவு பார்க்க போலீஸே தனிப்படை அமைத்துச் செயல்படுவது கேவலம். அந்தத்





• சாதனை நேரம்!



* அரசியல் அலட்டல்!



* தற்கொலை சோகம்!

நான் கொண்டாடுவது எந்த நாட்டுப் பண்பாடு?

! மேலை நாட்டுப் பண்பாடு. ராகுல் பிறந்த நாளுக்கு கோஷ்டிக்கு ஒரு கேக் வெட்டுவது தமிழக காங்கிரஸ் பண்பாடு. அதுவும் ராகுல் வயதுக்கேற்ப 36 கிலோ கேக் என்று இளங்கோவன் அணி நாடுவது ஆடம்பர பண்பாடு!

துறையைக் கையில் வைத்திருக்கும் ஜெ. வாயே திறக்காதது அதைவிட...!

● த. சத்தியநாராயணன், அயன்புரம்

? அந்நியன் பார்த்தீர்களா?

! 'இந்தியன்', 'ஜென்டில்மேன்', 'முதல்வன்' என தம்முடைய 'ன்' படங்களோடு, சிம்புவின் 'மன்மதன்' படத்தையும் சேர்த்துக் கலக்கி, சம்பூர்ண ராமாயணம் போல நீண்ண்ண்ட படம் தந்திருக்கிறார் ஷங்கர்... ஆனால் சுவாரஸ்யமாக!

● ஜெ. துரைராஜ், சென்னை

? நடிகை ஷாலினியின் துயர மரணம் குறித்து...?

! வயதுக்குரிய அழகு, வயதை மீறிய அறிவு. ஆனால் வயதுக்குத் தகுந்த மன பலம் மட்டும் இல்லாததால் விளைந்த தற்கொலை சோகம்.

● ஆர். நாகராஜன், சென்னை - 117 ★

? போலி வாக்காளர்களைச் சேர்த்து ஒரு கட்சி ஆட்சியைப் பிடித்துவிட முடியுமா..?

! முடியுமே! போலி வாக்காளர்கள் ப்ளஸ் நிஜ வாக்காளர்கள் என்னும்போது; ஒரு கட்சி திட்டமிட்டு ஏமாற்றி வெற்றிபெற முடியும்.

● கே. சுதர்சன், தூத்துக்குடி - 2

? கேக் வெட்டி பிறந்த



* நீண்ட அவியல்

● எஸ்.அன்புமணி, ஈரோடு ❐

? இந்த ஆட்சியில் பலப்பல கூடுதல் சலுகைகள் தரப்பட்டு, காவல் துறையைச் செல்லப்பிள்ளையாக நடத்தியும், ஏன் அத்துறை இவ்வளவு வீழ்ச்சியுற்றிருக்கிறது?

! சலுகைகளால் நேர்மையை வளர்க்க முடியாது. ஆட்சியில் இருப்போர் நேர்மைக்கு முன்னுதாரணமாகத் திகழ்ந்து, காவல்துறையைச் சொந்த விருப்பு - வெறுப்புக்கு ஏற்ப பயன்படுத்தாமல் கண்டிப்புடன் விளங்கினால்தான் நேர்மை வளரும்.



★ சமரச முயற்சி!



★ சொதப்பிய வசனம்!

● உஷா, சென்னை - 4

? பரபரப்பு ஏற்படுத்திய மைக்கேல் ஜாக்ஸன் வழக்குகளில் கடைசியில் அவர் நிரபராதி என்று தீர்ப்பாகிவிட்டதே?

! அவரை நிரபராதி என்று தீர்ப்புக் கூறவில்லை. அவரை தண்டிக்கப் போதுமான சாட்சியங்கள் இல்லை; எனவே விடுதலை என்றுதான் கூறுகிறது. இனி அவரால் பாதிக்கப்பட்டவர்கள் மேல்முறையீடு செய்யாதிருக்க, அவர் நஷ்டஈடு தந்து சமரசம் செய்து கொள்வார் என்றும் செய்தி வெளியாகியுள்ளது.

● ச.ம.இனியன், தி.ஸ்ரீகரம்

? அரசியலில் சிறந்த நடிகர் அத்வானி போலத் தெரிகிறதே?

! அரசியல்வாதிகள் எல்லோருமே நடிகர்கள்தான். அத்வானி டயலாக்கை மாற்றிச் சொதப்பிவிட்டார்; அவ்வளவுதான்.

● அ. சுஹைல் ரஹ்மான், திருச்சி

? 'என்னைப் போன்று உருவ பொம்மை செய்து விற்பவர்களிடம் லாபத்தில் பங்கு கேட்பேன்' என்று லல்லுபிரசாத் யாதவ் கூறியிருப்பது எதைக் காட்டுகிறது?

! அவருக்கு நியாயமாகவும் (வாதாடி) பணம் பண்ணத் தெரியும் என்பதை!

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

? "சரோஜாதேவி மாதிரி அழகான, திறமையுள்ள நடிகைகள் நடித்தபோது 'தொட்டால் பூ மலரும்' என்று எழுத முடிந்தது. இப்போது எந்த மூஞ்சியைப் பார்த்து எழுதுவது... எழுதினால் முட்டாள் என்பார்கள்" என வாலி கூறியிருப்பது பற்றி...?

! 'பணத்துக்காகவும் நிர்ப்பந்தத்துக்காகவும் பாட்டு எழுதுவதானால் எழுதிக் கொள்ளுங்கள். அதற்காக பிறர்மீது பழியைப் போடாதீர்கள்' என்றுதான் கெட்டிக்காரர்களான வாலி இலக்கிய ரசிகர்கள் சொல்வார்கள்.

● ஏ. சுகுமார், காட்பாடி

? தி.மு.க. அறிமுகப்படுத்திய மினி பேருந்துகளை எதிர்த்த அ.தி.மு.க. அரசு, இன்று அவற்றின் எண்ணிக்கைகளை இரு மடங்காக்குகிறதே...?

! வழியில் நின்றுபோய் பயணிகளை அவதிக்குள்ளாக்கும் பஸ்களின் எண்ணிக்கை மும்மடங்காகிவிட்டதே!

● எச். ஆண்டனி தமிழரசன், மும்பை

? 'இந்துக்கள் அதிக குழந்தைகளைப் பெற வேண்டும்; முஸ்லிம் மக்கள் தொகை அதிகரிப்பை முறியடிக்க இது ஒன்றே வழி' என்கிறதே வி.எச்.பி.?

! தன் தலையில் தானே மண்ணை அள்ளிப் போட்டுக் கொள்வது போல, வி.எச்.பியின் முஸ்லிம் விரோதப் போக்கு, ஹிந்து விரோதப் போக்காகவும் மாறி வருவதன் அடையாளம். ●

❐ ரூ.100 பரிசு பெறுபவர் :
**எஸ்.அன்புமணி,** 3, சொக்கநாத வீதி,
ஈரோடு - 638 001.

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
**ஆர்.நாகராஜன்,** பிளாட் 111,
சுபம் நகர் மூன்றாவது பேஸ்,
பழைய பல்லாவரம்,
சென்னை - 600 117.

## அருள்வாக்கு



# எது ஸ்வர்க்கம்?

எத்தனையோ ஆசார்யர்கள் உண்டு. ஒருத்தர், 'ஸ்வாமிக்கு ஸேவகனாக ஸதா கைங்கர்யம் பண்ணிக் கொண்டிரு. அது தான் மோக்ஷம்' என்பார். இன்னொருத்தர் 'சூன்யமாகப் போய்விடு. அது தான் மோக்ஷம்' என்பார். இன்னொருத்தர், 'ஸ்வர்கம் என்ற இன்ப லோகத்திற்குப் போய் எல்லா இந்த்ரிய ஸுகங்களும் யதேஷ்டமாக அனுபவித்துக் கொண்டிரு. அதுதான் மோக்ஷம்' என்பார். இன்னொருத்தர், 'உனக்கு ரொம்பப் பாப கர்மா இருக்கிறது. அதனால் உனக்கு மோக்ஷமே கிடையாது; நித்ய நரகம்தான்' என்று கூடச் சொல்வார்!

ஆசார்யாள்தான், 'அப்பா, நீ இப்பவும் எப்பவும் மோக்ஷத்திலேயே இருந்து கொண்டிருப்பவன்தான்! மாயையின் ப்ராந்தியில்தான் அது உனக்குத் தெரியவில்லை. இந்த ப்ராந்திக்கு ஆளாவது மனஸ்தான். ஞானத்தினால் அதை அழித்துப் போட்டு விட்டாயானால் அப்போதே மோக்ஷாநுபவம் தான். மோக்ஷத்திலே வேறே ஒரு ஸ்வாமியிடம் நீ போகவில்லை! நீயே தான் ஸ்வாமி, நீயே தான் பரமாத்மா!'' என்றவர்.

பாபிகளுக்கு நித்ய நரகம் என்று அவர் சொல்லாதது மட்டுமில்லை. அவர்களுக்கும் உய்வு உண்டு என்று சொல்வதோடும் நிறுத்திக் கொள்ளவில்லை. இதற்கெல்லாம் மேலே, பாபி, பாபி என்கிறவனும் பரமாத்மாவேதான் என்பதாக, பதிதோத் தாரணத்தின் உச்சிக்குப் போனவர் நம் ஆசார்யாள். தம்முடைய அத்வைதத்தால் பதிதனையும் பரப்ரம்மமாக்கிய ஆசார்யாளைப் போலப் பதித பாவனர் யாருமில்லை.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

# நடக்குமென்பார்;

**29.6.2005 முதல் 5.7.2005 வரை**

**மேஷம்:** சுமாரான வாரம். வண்டி வாகனத்தில் செல்லும் போது எச்சரிக்கை தேவை. ஆரோக்கியத்தில் கவனம் தேவை. உத்தியோகத்தில் மாற்றம் வரும். வியாபாரிகளுக்கு தொழிலில் மந்தகதி இருக்கும். புதிய முயற்சிகளை சற்று தள்ளிப் போடுவது நல்லது. மாணவ - மாணவிகள் படிப்பில் அதிக அக்கறை செலுத்தவும். சனி, குரு வழிபாடு செய்து வருதல் நலம்.

**ரிஷபம்:** நன்மையும் தீமையும் கலந்த வாரம். குழந்தைகள் வழியில் சுப காரியம் நடக்கும். நண்பர்கள் அனுகூலம் பெறுபவர். புதிய வீடு வாசல் வாங்க நல்ல நேரம். பொருளாதாரத்தில் மேன்மை உண்டாகும். வியாபாரிகள் புதிய தொழில் துவங்கலாம். உத்தியோகஸ்தர்களுக்கு நல்ல முன்னேற்றம் ஏற்படும். வேலை இல்லாதவர்களுக்கு வேலை கிடைக்கும். திருமணம் ஆகாதவர்களுக்குத் திருமணம் கைகூடும். தூரதேசப் பிரயாணம் அமையும்.

**மிதுனம்:** மிக மேன்மையான வாரம். குடும்பத்தில் நல்ல காரியம் நடக்கும். வேலை தேடும் இடங்களில் வேலை உடன் கிடைக்கும். கொடுக்கல் வாங்கலில் ஏற்றம் காணும். பொருளாதார நிலை உயரும். திருமணம் கைகூடும். சிலருக்கு வெளிநாடு செல்லும் யோகம் உண்டு. ராகு, கேது வழிபாடு செய்வது நலம்.

**கடகம்:** நற்பலன்கள் சேரும் வாரம். தொட்டது துலங்கும். தெய்வ அனுகூலம் ஏற்படும். தன வரவு கூடும். வேலை தேடும் நபர்களுக்கு வேலை கிடைக்கும். சிலருக்கு அயல்நாடு செல்லும் வாய்ப்பு கிடைக்கும். உடன் பிறந்தவர்கள் வழியில் நல்லது நடக்கும். புதிய முயற்சிகளில் அனுகூலம் ஏற்படும். குரு/ சனி வழிபாடு அவசியம்.

**சிம்மம்:** வெற்றிதரும் வாரம். பண வரவு இருக்கும். நெருங்கிப் பழகினவர்கள் சிலர் விலகிப் போவார்கள். கைப்பொருள் மீது கவனம் தேவை. ஆரோக்கியத்தில் கவனம் தேவை. யாரிடமும் வாக்குவாதம் பண்ண வேண்டாம். கணவன் - மனைவி விட்டுக்கொடுத்துப் போவது நல்லது. வியாபாரிகளுக்கு தொழிலில் மந்தகதி இருக்கும். சனி, ராகு, கேது வழிபாடு செய்யவும்.

**கன்னி:** மேன்மையான வாரம். இதுவரை இருந்த குழப்பங்களும் சிக்கல்களும் தீரும். வியாபாரிகள் புதிய தொழில் துவங்கலாம். உத்தியோகஸ்தர்களுக்கு நற்பலன் கிடைக்கும். சிலருக்கு வெளிநாடு செல்லும் வாய்ப்பு வரும். குடும்பத்தில் திருமணம் கைகூடும். கணவன், மனைவி விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. குழந்தைகள் வழியில்



நன்மைகள் கிடைக்கும். கேது, ராகு வழிபாடு செய்து வரவும்.

**துலாம்:** நன்மை தரும் வாரம். உத்தியோகத்தில் இட மாற்றம் ஏற்படும். வியாபாரிகள் நற்பலனை அடைவார்கள். திருமணமாகாதவர்களுக்கு திருமணம் கைகூடும். குழந்தைகள் வழியில் சந்தோஷம் ஏற்படும்.



# நடக்கும்!

வீடு வாசல் வாங்க ஏற்ற நேரம். மாணவ-மாணவிகள் ஏற்றம் பெறுவார்கள். கலைஞர்களுக்கு நற்பலன் கிட்டும். குரு, சனி வழிபாடு அவசியம்.

**விருச்சிகம்:** குழப்பங்களும் சிக்கல்களும் தீரும் வாரம். குடும்பத்தில் நல்லது நடக்கும். குழந்தைகள் பற்றிய கவலை தீரும். புதிய வீடு வாசல் வாங்க ஏற்ற நேரம். உத்தியோகத்தில் சிலருக்கு ஊதிய உயர்வு, பணி மாற்றம் ஏற்படும்.

**கி**ரகப் பெயர்ச்சிகளால் ஏற்படும் கஷ்டங்கள் நீங்க, எந்தக் காரியமும் நல்லபடி நடக்க, ஆயுள், ஆரோக்கியத்துடன் வாழ அருளும் அனுமன் ஸ்லோகம்.

"மனோஜவம் மாருத துல்ய வேகம்
ஜிதேந்திரியம் புத்திமதாம் வரிஷ்டம்
வாதாத்மஜம் வானரயூத முக்யம்
ஸ்ரீராமதூதம் சிரஸா நமாமி.'

கலைஞர்களுக்கு ஏற்றமான நேரம். வியாபாரிகளுக்கு நற்பலன் கூடும்.

**தனசு:** சுமாரான வாரம். பொருளாதார நிலை சற்று சிரமம் கொடுக்கும். வியாபாரிகளுக்கு தொழிலில் தேக்க நிலை ஏற்படும். கொடுக்கல் - வாங்கலில் எச்சரிக்கை தேவை. வாகனங்களில் செல்லும்போது கவனம் தேவை. மாணவ-மாணவிகளுக்கு படிப்பில் கவனம் தேவை. ராகு, கேது, சனி, குரு வழிபாடு அவசியம்.

**மகரம்:** வெற்றி அளிக்கும் வாரம். குடும்பத்தில் சுப காரியம் நிறைவேறும். குழந்தைகளுக்கு பேர், புகழ் வரும். பணப் பற்றாக்குறை ஏற்படாது. வியாபாரிகளுக்கு நல்ல முன்னேற்றமான வாரம். சிலருக்கு வெளிநாடு செல்ல நேரிடும். வழக்கு வியாஜ்ஜியங்கள் வெற்றி காணும். மொத்தத்தில் நல்ல வாரம்.

**கும்பம்:** மேன்மை

தஞ்சை பரத்வாஜ்

# பரத்வாஜ் பதில்கள்

**என் மகளுக்கு எப்போது திருமணம் நடக்கும்? பரிகாரம் தேவையா?**

**- பெயர் வெளியிட விரும்பாத வாசகர்**

உங்கள் பெண்ணுக்கு 32வது வயதில் திருமணம் நடக்கும். உங்கள் ஊர்ப்பக்கமே பிறந்தவனாக, உறவில் இல்லாத, படித்து வேலையில் உள்ள வரனாக அமையும். ஸர்ப்ப தோஷம்/செவ்வாய் தோஷம் உள்ள ஜாதகமாகச் சேர்க்கவும்.

**என் மகனுக்கு 35 வயதாகிறது. எத்தனை முயன்றாலும் திருமணம் தாமதமாகிறது. எப்போது திருமணம் நடக்கும்? பரிகாரம் என்ன செய்ய வேண்டும்?**

**- எம். விநாயகம், சென்னை - 91.**

உங்கள் மகனுக்கு தற்போது ராகு தசை நடப்பதால் திருமணம் தாமதமாகிறது. செப்டம்பர் 2005க்கு மேல் திருமணம் கைகூடும். படித்து, வேலையில் உள்ள பெண்ணாக அமையும். ஸர்ப்பதோஷம் உள்ள ஜாதகமாகச் சேர்க்கவும்.

**என் மகன் அமெரிக்காவில் எம்.எஸ் படித்துவிட்டு ஒரு வருட காலமாக வேலை கிடைக்காமல் அங்கேயே கஷ்டப்படுகிறான். அவனுக்கு இங்கே வேலை கிடைக்குமா? திருமணம் செய்துவைப்பது எப்போது?**

**- வித்யா வெங்கட், பெங்களூர்**

உங்கள் மகனுக்கு ராகு தசை நடக்கிறது. ஜூலை மாதத்திற்குப் பின் வெளிநாட்டில் வேலை கிடைக்கும். இங்கே நல்ல வேலை கிடைக்க வாய்ப்பில்லை. இன்னும் ஓராண்டில் திருமணம் நடக்கும். நாகதோஷம் உள்ள பெண்ணாகப் பார்க்கவும்.

**நான் பணிபுரிந்த தனியார் கல்லூரியிலிருந்து ஓய்வு பெற்ற பின் எந்தப் பணமும் வரவில்லை. பணம் கிடைக்குமா? தற்போது செய்துவரும் தொழிலும் இலாபமில்லை. தொடர்ந்து நடத்தலாமா?**

**- சந்தானலட்சுமி, கோவை**

உங்கள் ஜாதகப்படி தற்போது சுக்ர தசையில் சனி புத்தி நடப்பதால், எதிலும் தாமதம் ஏற்படும். செப்டம்பருக்குப் பின் முடிவு தெரியலாம். கிரஹசாரங்களின்படி நஷ்டமே காட்டுவதால், தொழிலை தொடர்ந்து நடத்துவது உசிதமில்லை.

**என் மூத்த மகன் விமானப்பணியில் பணிபுரிந்து இறந்துவிட்டான். கடைசி மகனுக்கு, அவன் கோபதாபங்களைச் சமாளித்து குடும்பம் நடத்த ஏற்ற மருமகள் தேடியும் 3,4 வருடங்களாக அமையவில்லை. என் வாழ்நாளுக்குள் என் மகன் நல்லவிதமாக வாழ்க்கை நடத்துவதைப் பார்க்கும் யோகம் இருக்கிறதா?**

**- பெயர் வெளியிட விரும்பாத வாசகர், சென்னை - 40**

உங்கள் மகனுக்கு 2005 இறுதிக்குள் திருமணம் நடக்க வாய்ப்பிருக்கிறது. படித்த, பண்புள்ள பெண்ணாக வந்து அமையும்.

---

யளிக்கும் வாரம். பணப் பற்றாக்குறை விலகும். சிலருக்கு இடமாற்றம் ஏற்படும். கணவன் - மனைவி விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. குழந்தைகள் வழியில் சுப நிகழ்ச்சிகள் நடக்கும். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். திருமணத் தடைகள் விலகி திருமணம் கைகூடும். வியாபாரிகள் கூட்டுத் தொழிலில் எச்சரிக்கையாக இருக்கவும். யாருக்கும் ஜாமீன் போட வேண்டாம் வாக்குவாதங்களைத் தவிர்ப்பது நல்லது.



**மீனம்:** மிகவும் நல்ல வாரம். உத்தியோகத்திலும் குடும்பத்திலும் இருந்து வந்த குழப்பங்கள் நீங்கும். குடும்பத்தில் சுப நிகழ்ச்சி கைகூடும். மாணவ, மாணவிகள் நற்பலன் பெறுவார்கள். கலைஞர்கள் ஏற்றம் பெறுவார்கள். வியாபாரிகள் நற்பலன் பெறுவார்கள். பண வரவு சரளமாக இருக்கும். ராகு, கேது வழிபாடு அவசியம். ○



# வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.

அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்

ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்யஸ்மரண ஸமிதி (Regd)

"ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகாஸ்தானம்"

29-30 கிழக்கு ஐய்யன் தெரு, கும்பகோணம் - 612 001.

E-mail : vedagdps@sancharnet.in - Website : www.geocities.com/gdpskmu

☎ : (0435)
Off : 2425948
Fax : 2423777
Patasala : 2422866

"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். ஒரு வேதக் குழந்தையின் படிப்பு பராமரிப்பு செலவை ஒரு குடும்பம் எடுத்துக்கொண்டால், பேருபகாரமாக இருக்கும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் முதாதயர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 463 ஆண்டுகளாக நடந்துவரும் ராஜ வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாம்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 170 மாணவர்களுக்கு 15 வேத, சாஸ்திர அத்யாபகர்கள் புராதனமான குருகுல முறைப்படி ரிக் வேதம், கிருஷ்ண, சுக்ல யஜுர் வேதம், ஸாம வேதத்தை போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்குகொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம். புதிய பாடசாலை கட்டிடம் ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகா ஸ்தானம் என பெயரிடப்பட்டு 21-6-2004 திங்கள்கிழமை ஸ்ரீ காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் திறந்து வைத்து வேத அபிவிருத்திக்கு அர்ப்பணித்தார்.

| தங்கள் நன்கொடைக்கு U/S 80-G பிரிவின்படி வருமான வரி விலக்கு உண்டு<br>நன்கொடை திட்ட விபரங்கள் | நன்கொடை தொகை | நிரந்தர வைப்பு நிதி "Corpus Fund" |
|---|---|---|
| ஒரு வேளை ஸமாராதனைக்கு (பகுதி தொகை) | Rs. 500 | Rs. 8,000 |
| அமாவாஸ்யை (or) பௌர்ணமி (or) சுருஷ்ண (or) சுக்ல பக்ஷ த்வாதசி ஒரு ஸமாராதனைக்கு [Please choose one specific day of a particular month in a year for Samaradhana] | Rs. 1,500 | Rs. 25,000 |
| வேதம் பயிலும் ஒரு மாணவனின் பராமரிப்பு ஒரு மாத செலவு ரூ.1000/- | Rs. 12,000 P.A | Rs. 2 Lakhs |

நன்கொடைக்கான தொகையை Cross செய்யப்பட்ட D.D./ Cheque-ஐ A.V.M.S.G.D.P.S. Samithi என்ற பெயரில் அனுப்பக் கோருகிறோம்.

இளமை



கல்கி

# ரண்டக்க... ரண்டக்க... ஆட்டக்காரர்!

**த**மது 25வது பிறந்த நாளை (ஜூன் 27) 'ரண்டக்க... ரண்டக்க'வென குத்தாட்டம் போட்டுக் கொண்டாடியிருப்பார் இந்த வீரர். பின்னே சந்தோஷம் இருக்காதா என்ன! சென்ற வருடம் இதே நேரத்தில் சாதாரண வீரராக அறியப்பட்டவர். இந்த நிமிடம் இங்கிலாந்தே, ஏன் கிரிக்கெட் உலகமே 'லேட்டஸ்ட்'டாகக் கொண்டாடும் சர்வதேச ஆட்டக்காரர். ஒவ்வொரு ஆட்டத்திலும் மைதானமே குலுங்கும்படி 'அதிரடித் திருவிழா' நடத்தி வருகிறார் தன் பேட்டிங்கால்!

யாரவர்... கெவின் பீட்டர்சன். இங்கிலாந்து அணிக்குள் புதிதாக நுழைந்து, 'நுங்கு' எடுத்துக் கொண்டிருக்கிறார். பதினான்கு ஆட்டங்களில் அறுநூற்றி ஐம்பது ரன்களை நொறுக்கி, ஸ்டிரைக் ரேட்டை நூற்றிநான்கில் கொண்டுபோய் வைத்து மிரட்டிக் கொண்டிருக்கிறார். கடைசி ஐந்து இன்னிங்ஸில் இவர் ஆடிய அசுர ஆட்டம் கண்டு அரண்டு போயிருப்பது இங்கிலாந்து ரசிகர்கள் மட்டுமல்ல... இவரை அணிக்குக் கொண்டு வந்த செலக்டர்களும் கூடத்தான்.

இதுவரை மூன்று சதம், மூன்று அரைச் சதம், நான்கு மேன் ஆஃப் தி மேட்ச் விருதுகள் என்று ஆரம்பத்திலேயே அசத்தக் துவங்கிவிட்ட கெவினின் கிரிக்கெட் வாழ்க்கை தொடங்கியது, இங்கிலாந்தின் நாட்டிங் ஹேம் ஷயர் அணியிலிருந்து! அந்த அணிக்காக மூன்று ஆண்டுகள் (2001-2004) விளையாடிய கெவின், அப்போதே பல கிரிக்கெட் ஜாம்பவான்களின் கவனத்தை ஈர்த்தார். பின் ஹேம் ஷையர் அணிக்காக விளையாட கையெழுத்திட்டார். பின் இங்கிலாந்து அணிக்குத் தேர்வு செய்யப்பட்டு...

இந்த வலது கை ஆட்டக்காரர் பிறந்தது சௌத் ஆப்பிரிக்கா. ஆனால், அம்மா இங்கிலாந்து நாட்டவர். அந்த அடிப்படையில் இங்கிலாந்து டீமுக்குள் செப்டெம்பர் 2004ல் இடம் பிடித்தார் ஜிம்பாப்வே டூருக்காக! கொஞ்சம் ஃபார்மை இழந்திருந்த இங்கிலாந்து, இப்போது புதியவர்களின் வரவால் புத்துணர்ச்சி பெற்றிருப்பது உண்மைதான். கெவினை விரைவில் டெஸ்ட் டீமிலும் எதிர்பார்க்கலாம்.

- முகில்



# "சிம்புவின் ஹீரோயின் நானே!"



'**கா**தல்' வெளிவந்து ஆறு மாதங்களாகிவிட்டன. இப்பொழுதுதான் அடுத்த தமிழ்ப் படத்துக்கான ஷூட்டிங்குக்கு கிளம்புகிறார் சந்தியா. காரணமறிய, சந்தியாவை குறுக்கு விசாரணை செய்தோம்.

**ஊர்லதான் இருக்கீங்களா?**

"ஹா... ஹா... ஹா... நான் ரொம்ப நாளா சென்னையில இல்லை தெரியுமா.. 'வெனிஸ் இன் வொண்டர் லேண்ட்' படத்துக்காக ஜாலியா கேரளா ட்ரிப் அடிச்சிருந்தேன். வெயிலிலிருந்து க்ரேட் எஸ்கேப் ஆனேம்பா!"

**தமிழில் ஏன் இத்தனை இடைவெளி?**

"தானத்தில் சிறந்தது நிதானம் இல்லையா? 'டிஷ்யூம்' லேட்டானதால மலையாளப் படத்துல நடிச்சேன். இப்போ ஆற அமர நானே கதை கேட்டு, கைவசம் நாலு தமிழ்ப் படங்கள் வைச்சிருக்கேன்."

**சிம்புவின் 'வல்லவன்' படத்துல கௌரவ வேடமா?**

"ஹலோ... மெயின் கேரக்டரே நான் தான். சிம்புவோட க்ளோஸ் ஃப்ரண்டா நடிச்சிருக்கேன. மத்த கேரக்டர்கள் வந்து வந்து போகும். நானே முதன்மை நாயகி. கிளாமர் இல்லாம மாடர்ன் பொண்ணா நடிக்கிறேன்."

**'அறிந்தும் அறியாமலும்' படத்துல ஏன் நீக்கினாங்க?**

"'காதல்' டைம்ல புக்கான படம். கரெக்டா 'காதல்' க்ளைமாக்ஸ் எடுக்கும் போது அவங்க படம் தொடங்கினாங்க. 'என் ஹீரோயினுக்கு எந்த கவனச்சிதறலும் இருக்கக் கூடாது'ன்னு பாலாஜி சக்திவேல் சார் கண்டிப்பா சொன்னதால பின் வாங்கிட்டோம். ஆனா என்கிட்ட 'அறிந்தும் அறியாமலும்' கதை சொன்னப்போ, ஹீரோயின் கேரக்டர்ல அவ்வளவு க்ளாமர் கிடையாது."

**சொந்தக் குரல்ல பேசப்போறீங்களா?**

"மலையாளம் படத்துல நானேதான் குரல் கொடுத்தேன். தமிழ்ல இனி சொந்தக் குரலில் பேசலாம். ஏன்னா நான் சென்னைப் பொண்ணு."

**பத்தாவது முடிச்சாச்சா?**

"செப்டம்பர்ல ப்ரைவேட்டா டென்த் எக்ஸாம் எழுதப் போறேன். படப்பிடிப்புகளுக்கு மத்தியில தட்டு தடுமாறி எப்படியும் டிகிரி முடிச்சிடுவேன்னு நினைக்கிறேன்."

**- சநகன்**



## கல்கி

# தயாநிதி டிக்ஷனரி!



**தாத்தா**

பெயருக்குத்தான் தாத்தா... உண்மையில் ஆத்தா...

**அண்ணன்**

சேட்டிலைட் பி.ஆர்.ஓ.

**டெலிபோன்**

இவருக்காகவே கிரஹாம்பெல் கண்டு பிடித்த சாதனம்.

**பதவி**

ஓவர் நைட்டில் கிடைத்துவிடுவது

**விளம்பரம்**

அரசு செலவில் பிரம்மாண்டமாக செய்து கொள்வது

**அம்மா**

நிலைமை புரியாமல் வேட்டி கட்டச் சொல்பவர்

**தமிழ் சாஃப்ட்வேர்**

வருங்காலத்தில் முரசொலியில் கடிதமெழுத உதவ இருப்பது

**விளையாட்டு**

சோனியாவுக்கு அருகில் நின்று போஸ் கொடுக்க, மற்றவர்களுடன் போட்டி போடுவது

**பொழுதுபோக்கு**

பிரஸ்மீட்களில் தாத்தாவுக்குப் பின்னால் பவ்யமாக நிற்பது

**தமிழ்நாடு**

நல்ல திட்டங்களை நைஸாக தள்ளிக் கொண்டு வரும் மாநிலம்

**டி.ஆர்.பாலு**

அடையாளம் தெரியாமல் போன டெல்லி சீனியர்.

**டெல்லி**

'இல்லி' மாதிரி செயல்பட்டுக் கொண்டிருக்கும் இடம்.

- முராரி



# சாடர்ன் இளைஞர்களே!



இதோ இளைஞர்களுக்கான அறிவியல் பூர்வமான சாடர்ன் பெயர்ச்சிப் பலன்கள்! அதற்கு முன்பு ஒரு சிறிய இன்ட்ரொடக்ஷன், யார் இந்த சாடர்ன்?

சூரிய ஃபேமிலியில் இரண்டாவது பெரிய மெம்பர் சாடர்ன் எனும் சனி கிரகம். இவர் ராத்திரியில் தூங்க மாட்டார். நேபாள கூர்க்கா மாதிரி கொட்டக் கொட்ட கண் விழித்து சுற்றிக் கொண்டே இருப்பார். மிகவும் நல்லவர். சற்று சைலண்ட் டைப். வெட்டி பந்தா எல்லாம் இடையாது. பிற நட்சத்திரங்களைப் போல கண் சிமிட்டுவதில்லை. விசில் கூட அடிக்கத் தெரியாது. தான் உண்டு தன் ரவுண்ட்ஸ் உண்டு என்று சுற்றிக் கொண்டேயிருப்பார். இதனால் சாடர்னின் ஓரங்கள் சற்று சப்பையாகி விட்டதாகக் கண்டுபிடித்திருக்கிறார்கள். ஆனால் அதற்காக இவர் வருத்தப்பட்டதாகத் தெரியவில்லை. ரொம்ப சமர்த்து.

அது மட்டுமா? இவர் ரியலி ச்சோ க்யூட். அதற்குக் காரணம், சாடர்னைச் சுற்றி எப்பொழுதும் காணப்படும் பளபளா வளையம்தான். இந்த வளையம் கிட்டத்தட்ட சாடர்னின் கேர்ள் ஃப்ரெண்ட் மாதிரி. எங்கே போனாலும் தன் வளையத்தைக் கூட்டிக்கொண்டு தான் இவர் போவார். 'ஹூம், நானும் தான் டெய்லி சுத்திக்கிட்டேயிருக்கேன். எனக்கு எதுவும் கேர்ள்ஃப்ரெண்ட் கிடைக்கலையே' என்று ஜூபிடர் போன்ற பிற பிளானட்டுகள் புலம்புவதாகக் கேள்வி.

இன்னொன்று, நாம் தான் இவரை டெலஸ்கோப், சாட்டிலைட் எல்லாம் வைத்து ராப்பகலாக வேவு பார்த்துக் கொண்டிருக்கிறோம். சாடர்ன் நம்மை திரும்பிக்கூடப் பார்ப்பதில்லை. அதனால் சாடர்ன் 'பெயர்வதைப்' பற்றி யார் எதைச் சொன்னாலும் அதை நீங்கள் காதில் போட்டுக்கொள்ளக் கூடாது.

இதை கவனியுங்கள், சாடர்னை மானசீக குருவாக ஏற்றுக்கொண்டு, அவரை நினைத்தபடியே லேடீஸ் காலேஜைச் சுற்றி வரும் அப்ரெண்டீஸ் சாடர்ன்களுக்கு, அவர்கள் விரும்பிய பாதுகாப்பு வளையம் விரைவில் கிடைத்து விடுவதாக சாட்டிலைட்டுகள் சத்தியம் செய்கின்றன. சாட்டிலைட்டுக்குப் பொய் சொல்லத் தெரியாது. முயன்று பாருங்கள்.

- இன்பா

## குறையொன்றுமில்லை

ஜகன்னாத கனபாடிகளின் அனுபவம் என்ன உணர்த்துகிறது என்றால், வித்யையானது ஆயே துக்கம்; யயே சுகம்...- அதைப் பெறுவதற்கு ரொம்ப சிரமப்பட வேண்டும்; ஆனால் மற்றொருவருக்குக் கொடுக்கிறபோது ஆனந்தத்தை ஏற்படுத்துகிறது. கடைசியிலே சிஷ்யனுடைய வாக்கிலே மந்திரத்தை வரவழைக்கிறபோது அந்த ஆனந்தம்! அதன் பிறகு அந்த மந்திர சப்தம் மறக்குமோ அந்தச் சீடனுக்கு! அந்தச் சீடர் இன்றைக்குப் பல பேருக்கு வேதாத்யயனம் பண்ணி வைக்கிறார். ஆச்சர்யமாக அந்த குறிப்பிட்ட சுலோகம் வருகிறபோது அவர் அழுவே அழுதுவிடுவார். 'ஒருநாள் இதற்கு இவ்வளவு சிரமப்பட்டோமே, இப்பொழுது அதே மந்திரத்தை ஆனந்தமாகச் சொல்கிறோமே' என்று மகிழ்வார்.

ஆகவே, வித்யை ஆயே துக்கம்; யயே சுகம். தனமிருக்கிறதே - செல்வம், ஆயேபி துக்கம், யயேபி துக்கம்!

இந்த மாதிரி துக்கங்கள், பயம் இத்யாதி பகவத் விஷயத்திலே உண்டா என்று கேட்டால்,

'ஸ்வரூப ரூப குண விபவ ஐச்வர்யம்' என்று சொல்வார்கள். இதெல்லாம் பகவத் ஸ்வரூபம். அவனது ஸ்வரூபத்துக்கோ,



ரூபத்துக்கோ, குணத்துக்கோ, ஐச்வர்யத்துக்கோ ஒரு நாளும் குறைவு கிடையாது.

ஆகையினால்தான் ஆண்டாள், 'நீங்காத செல்வம் நிறைந்தேலோர் எம்பாவாய்' என்று பாடினாள்.

'ஒரு நாளும் குறைவில்லாத, அவனை விட்டு நீங்காத / விலகாத ஐச்வர்யமானது எப்போதும் எல்லோருக்கும் ஏற்பட வேண்டும்' என்று ஆண்டாள் பேசினாள்.

ஐச்வர்ய ப்ரதன் அவன். அவனிடத்திலே எந்தக் குறையும் கிடையாது. குணத்திலே குறை உண்டா என்றால், ஸௌலப்ய, ஸௌசீல்ய, வாத்ஸல்ய, மார்தவ, ஆர்தவ, ஸௌஹார்த்த, ஸாம்ய, காருண்ய, மாதுர்ய, காம்பீர்ய, ஔதார்ய, சாதுர்ய, ஸ்தைர்ய, தைர்ய, ஸௌர்ய, பராக்கிரம, சத்யகாம, சத்யசங்கல்ப்ப, க்ருதித்ய, க்ருதக்ஞ, நார்த்த, சங்கேய கல்யாண குண கணௌக: மஹார்ணவ

- என்று சரணாகதி கத்யம் என்கிற கத்யத்திலே எல்லாமே அவனிடத்திலே அபரிமிதமாய் இருப்பதைச் சொல்கிறது.

அதை ஆழ்வார், 'கொள்ளக் குறைவிலன்' என்ற ஒரு சின்ன சப்தத்திலே காட்டினார். எடுக்க எடுக்கக் குறைவில்லாதவன். பெரிய பொக்கிஷம் அவன். வைத்த

# உள்ளே தேடு..!

முக்கூர் லக்ஷ்மீநரஸிம்மாச்சார்யார்



மாநிதி என்றே பெயர் பகவானுக்கு.

ஆழ்வார் திருநகரிக்கு அருகிலே திருக்கோளூர் என்கிற க்ஷேத்திரத்திலே, எழுந்தருளியிருக்கிற எம் பெருமானுக்கு 'வைத்தமா நிதி' என்று பெயர்! பெரிய நிதியாக, யார் வேண்டுமானாலும் அனுபவிக்கும் வண்ணம் அவன் காட்சி தருகிறான்.

"ராமு நீ சன்னிதி சேவ சுகமா?" என்று தியாகராஜர் பாடினார். நிதி சால சுகமா? என்று கேட்டுப் பாடினார் தியாக ப்ரும்மம். 'வெறும் நிதி சுகமா? ராமனுடைய சன்னிதி சுகமா?' என்று கேட்டார். ராமனுடைய சன்னிதி குறையாத நிதி. அழிவில்லாத நிதி. பயம் என்பது அவனிடத்திலே கிடையவே கிடையாது. செலவு என்பதே இல்லை. எப்போதும் வ்ருத்தி தான். வ்ருத்தி: என்று பெரியோர்கள் சொல்லுவார்கள். சமஸ்தத்திலேயும் பூரணமாக நிரம்பினவன் அவன். ஆகவே அவ்யய: என்ற சப்தத்தினால் அழைக்கப்படுகிறான்.

புருஷ: என்பது அடுத்த நாமம். புருஷ சப்தத்தினால் சொல்லப்படக் கூடியவன் யார் என்றால், விஷ்ணு என்கிறார். விஷ்ணுவைத்தான் புருஷன் என்ற சப்தத்தினாலே வேதமானது குறிப்பிடுகிறது.

விஷ்ணுவைச் சொல்லக்கூடிய அந்த சூக்தத்துக்கு புருஷ சூக்தம் என்று பெயர்.

புருஷ சூக்தத்துக்கு எல்லா விதத்திலேயும் ஏற்றம் உண்டு. புருஷனுடைய பெருமையைக் காட்ட வந்ததனாலே, அதற்கு புருஷ சூக்தம் என்று பெயர். ஆகவே புருஷ சூக்தத்துக்கு எல்லா விதத்திலும் ஏற்றம் உண்டு. புருஷனுடைய பெருமையைக் காட்ட வந்ததனாலே அதற்கு ஏற்றம்.

அதனால்தான் சாஸ்திரம் இன்னொரு இடத்திலே சொல்கிறபோது,

வேதேஷு பௌருஷம் சூக்தம்
புராணேஷு ச வைஷ்ணவம்
பாரதே பகவத் கீதா
தர்ம சாஸ்த்ரேஷு மானவம்

- என்று புருஷ சூக்தத்தைக் கொண்டாடிச் சொல்கிறது.

இவையெல்லாம் முக்கியம்; பரமப் பிரமாணம் என்று நான்கு விஷயங்களை எடுத்துச் சொல்கிறது.

வேதத்திலே எது முக்கியம் என்றால், புருஷ சூக்தம் முக்கியம். புருஷ சூக்தம் இல்லாமல் காரிய கிரமமே கிடையாது. எல்லா இடத்திலேயும் இதைச் சொல்கிறோம். சுப காரியத்திலேயும் சொல்கிறோம். அசுப காரியத்திலேயும் சொல்கிறோம். சிராத்த தினத்தன்று பித்ரு தேவதைகள் கேட்கும்படியாக புருஷ சூக்தத்தைச் சொல்கிறோம். பித்ரு தேவதைகளை ஆவாஹனம் பண்ணுகிறபோது 'சிராத்த சம்ரக்ஷக ஸ்ரீ மஹாவிஷ்ணும் ஆவாஹயாமி' என்கிற இடத்தில்;

"சஹஸ்ர ஸீர்ஷா புருஷ:" என்று ஆரம்பித்து, புருஷ சூக்தம் சொல்லி, விஷ்ணுவை ஆவாஹனம் பண்ணுகிறோம்.

எங்கும் இந்த புருஷ சூக்தமானது படிக்கப்படுகிறது. அதிலிருந்தே இதனுடைய ஏற்றம் தெரிகிறது. ஆகையினாலே 'வேதேஷு பௌருஷம் சூக்தம்'. மீதி சூக்தங்கள் சில வேதத்தில் இருக்கும், சிலதில் இராது. ஆனால் இந்த புருஷ சூக்தம் எல்லா வேதங்களிலும் இருப்பதனாலே, அதற்குத் தனியான ஏற்றம். புருஷ சூக்தமில்லாத வேத பாகமே கிடையாது.

புராணேஷு ச வைஷ்ணவம் - புராணங்களிலேயே விஷ்ணு புராணம் மிகவும் உயர்ந்தது. தர்ம சாஸ்திரத்திலே மனு

"கண் ஆபரேஷன் சம்பந்தமா ஏதாவது சந்தேகமிருந்தா கேளுங்க!"

"ஆபரேஷனுக்கு அப்புறம் எத்தனை நாள் கழிச்சு சீரியல் பார்த்து அழலாம் டாக்டர்?"

- அம்பை தேவா



ஸ்ம்ருதி உயர்ந்தது. பாரதத்திலே பகவத்கீதை உயர்ந்தது. இவை யெல்லாம் 'உயர்ந்தது உயர்ந்தது' என்று சொல்லிக் கொண்டே வந்து, புருஷ ஸூக்தத்தையும் சொல்லியிருக்கிறது.

புருஷன் என்கிற சொல்லின் பொருள் என்ன...?

*புரி சயனாது புருஷ:*
*பஹு தானாது புருஷ:*
*புராணத்துவாது புருஷ,*
*பூர்ணத்துவாது புருஷ:*

- இதையே நமக்கு எல்லா ஆசார்யர்களும் காட்டுகிறார்கள். ஆதிசங்கர பகவத்பாதாள் என்ன, ஆனந்த தீர்த்தர் மத்வாச்சார்யர் என்ன, எல்லா ஆசார்யர்களும் ஒரு சேர நமக்கு இந்த அர்த்தத்தை- நான்கு வித பொருளை - இந்த நான்கு பேருமே புருஷ சப்தத்துக்குக் காட்டுகிறார்கள்.

புரி சயனாது புருஷ: - பட்டினத்திற்குள்ளே அவன் உறைவதனாலே, அவனுக்குப் புருஷன் என்று பெயர். பட்டணம் என்று க்ஷேத்திரத்துக்குப் பெயர். பட்டணத்திலே உறைகிறான்.

நமது உடலுக்கும் க்ஷேத்திரம் என்று பெயர். 'பன்னென்று பட்டினம் காப்பே' என்று பெரியாழ்வார் பேசுகிறார். அதையே கீதையிலே பரமாத்மா பதிமூன்றாவது அத்தியாயத்தின் ஆரம்பத்திலேயே சொல்கிறார். இந்த சரீரம் இருக்கிறதே, இதுவும் க்ஷேத்திரம் - ஒரு திவ்ய தேசம். பகவான் எழுந்தருளியிருக்கிற இடம் க்ஷேத்திரம்தானே!

அறுவடை பண்ணக்கூடிய பூமிக்கு - நஞ்சை - புஞ்சை நிலத்துக்கும் க்ஷேத்திரம் என்று பெயர்.

'இதெல்லாம் என்னுடைய க்ஷேத்திரம்' என்றால், அது அவருடைய பூமி; நிலம் என்று அர்த்தம்.

ஆகையினால் இந்த சரீரத்தையும் பூமி என்று எடுத்துக் கொண்டோமானால், இந்த க்ஷேத்திரத்தில் வினை விதைத்தவன் வினை அறுப்பான். எந்த விதையை நாம் இதிலே போடுகிறோமோ, அதுதான் முளைக்கும். பாபத்தை நட்டால், பாப வினை நிறைய சாகுபடி பண்ணலாம். புண்ணிய விதையை நட்டால், புண்ணியப் பயிரை சாகுபடி பண்ணலாம். அப்படி பூமியாகவும் இது இருக்கிறது! இதற்குள்ளே பகவான் நித்யவாஸம் பண்ணிக் கொண்டிருப்பதனாலே 'புரி சயனாது...'

ஒவ்வொருவருடைய ஹ்ருதய குகையிலேயும் பரமாத்மா வாஸம் பண்ணுகிற காரணத்தினாலே, அவன் 'புருஷன்' என்ற நாமாவுக்குரியவனாகிறான்.

ஹ்ருத் புண்டரீக தள ஹ்ருதயாகாசத்திலே அவனை யோகிகள் காண்கிறார்கள். யம - நியம - பிராணாயாம - பிரத்யாஹரா - த்யான - தாரண - ஆஸன- ஸமாதி என்ற அஷ்டாங்க யோகத்தின் மூலம், சமாதி என்கிற நிலையிலே உள்ளுக்குள்ளே அந்தர்யாமியாக, ஹ்ருதய குகைக்குள்ளே எழுந்தருளியிருக்கும்படியான எம்பெருமானைப் பார்க்கக் கொடுத்து வைத்தவர்களாகிறார்கள்.

'யோகினாம் ஹ்ருதி பச்யத:' ஹ்ருதயத்துக்குள் பகவானைப் பார்க்கிறார்கள் யோகிகள். நமக்குள்ளே பகவான் நித்ய வாஸம் பண்ணிக் கொண்டிருப்பதனாலே, அவனுக்குப் புருஷ: என்று பெயர். நமக்குள்ளே மட்டுமல்ல, எல்லா த்ரேகங்களுக்குள்ளேயும் அவனே இருப்பதனாலே, ஞானமுடையவர்களுக்குள்ளேயும் இருக்கிறான், அறிவற்ற பதார்த்தங்களிலேயும் உறைகிறான். இந்தக் காரணத்தினாலேயும் அவன் புருஷன் என்று பெயர் பெறுகிறான்.

அவன் இல்லாத இடமே இல்லை. பிரஹலாதன் என்ன சொல்கிறான்...?

*(வளரும்)*

## சுடோகு புதிர் விடை:

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 8 | 7 | 2 | 5 | 6 | 3 | 4 | 1 | 9 |
| 1 | 9 | 4 | 2 | 8 | 7 | 6 | 3 | 5 |
| 5 | 3 | 6 | 9 | 4 | 1 | 7 | 2 | 8 |
| 2 | 8 | 7 | 4 | 5 | 9 | 3 | 6 | 1 |
| 4 | 6 | 1 | 7 | 3 | 8 | 5 | 9 | 2 |
| 9 | 5 | 3 | 6 | 1 | 2 | 8 | 4 | 7 |
| 7 | 1 | 8 | 3 | 2 | 6 | 9 | 5 | 4 |
| 3 | 4 | 9 | 1 | 7 | 5 | 2 | 8 | 6 |
| 6 | 2 | 5 | 8 | 9 | 4 | 1 | 7 | 3 |

பிரமுகர்

# தனிச் சிறப்பு!

காலமாற்றத்திற்கேற்ப தன்னை மாற்றிக் கொண்டாலும் தரத்திலும், தகுதியிலும் எள்ளளவும் குறைந்து விடாத கல்கியை பாராட்ட வார்த்தைகளே இல்லை. புகைப்படங்களை அதன் மதிப்பறிந்து வெளியிட்டு, எங்களைப் போன்றவர்களுக்குப் புகழ் சேர்ப்பது கல்கிக்கு மட்டுமே உரிய தனிச்சிறப்பு. எத்தனையோ பத்திரிகைகளுக்கு நான் புகைப்படங்கள் எடுத்துக் கொண்டிருந்தாலும் கல்கிக்கு எடுக்கும்போது மட்டும்தான் மிகப் பெருமையாக உணர்கிறேன்.




படம் : ஸ்ரீஹரி

யோகா

# வித்தியாசமான புத்தகம் !




## "இம்மண்ணில் மறைக்கப்பட்ட ஓர் மாபெரும் பொக்கிஷம்"

## பிறந்த ஜாதகத்தையே யோகமாக மாற்றுவதற்கு சாஸ்திரம் காட்டும் வழிகள்

- நம்முடைய ஜாதகம் யோகமாக இல்லையே என்பவர்கள் இந்த பொக்கிஷத்தினை ஒருமுறை படியுங்கள். நீங்கள் அசந்து போவீர்கள்! இந்த நூலை படித்து முடித்ததும் உங்கள் வாழ்க்கையைப்பற்றி இதுவரை நீங்கள் நினைத்துக்கொண்டிருந்த எண்ணத்தை மாற்றிக்கொள்வீர்கள்.
- இது நடைமுறை சாத்தியமா என்பவர்களுக்காக இந்த கலையை பயன்படுத்தி பலன்பெற்றவர்களின் அனுபவத்தை இந்நூலில் இணைத்துள்ளோம்.
- பல்லாயிரக்கணக்கானவர்களின் வாழ்க்கையை மாற்றியமைத்த ஒரு உன்னத கலை. இந்த நூலை படிக்க வாய்ப்பு கிடைத்தால் அது நீங்கள் செய்த பூர்வ புண்ணியம்.

**தபாலில் பெற ரூ.65/- M.O.செய்யவும்**

**VPPயில் பெற புத்தகம் + VPP கட்டணம் சேர்த்து ரூ.100/-**


# A.E.RAAJAMANICKAM

BBM., DMM., DHA.,

ASTROLOGY & NUMEROLOGY

138, RANA NAGAR, BHAVANI(Post), ERODE - 638 301.

PH : 04256 - 230901, Cell : 98427 - 73737, 98652 - 94721

E-mail : astrobhavani@yahoo.com Website :www.oshaani.com


"பிறந்த ஜாதகத்தையே சரிசெய்யும் கலை" – இந்நிகழ்ச்சி பற்றி விஜய் TV -யில் ஒவ்வொரு வாரமும் செவ்வாய்க்கிழமை இரவு 11.30 மணிக்கு காணுங்கள்.

